# TAMIL
# DRAMATIC INTERLUDES

## FIRST BOOK

BY

C. R. NAMASIVAYA MUDALIAR,
*Senior Tamil Pandit, S. P. G. High School, Vepery,*
*and Editor, the 'Trained Teacher,' Madras*

With an Introduction by

Rao Bahadur L. C. WILLIAMS PILLAI, B. A., F. M. U.,
*Inspector of Schools, (retired) Madras*

MADRAS:
C. COOMARASAWMI NAIDU & SONS

 1910 [*Price, 12 Annas*

# நாடக மஞ்சரி

## முதல் புத்தகம்

சென்னை - வேப்பேரி
எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதரும்
'நல்லாசிரியன்' பத்திராதிபரும் ஆகிய
**கா. நமச்சிவாய முதலியார்**
எழுதியது

ராவ் பஹதூர் எல். ஸி. வில்லியம்ஸ் பிள்ளை,
பி. ஏ., எப். எம். யூ. அவர்கள் எழுதிய
முகவுரையுங் கொண்டது

சென்னை:
வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1910

 [விலை அணா 12.

# PREFATORY NOTE

The idea of writing an interlude or short dramatic piece in Tamil was originally suggested to me by the Rev. R. U. Potts, M. A., in connection with the visit of His Excellency Sir Arthur Lawley to the S. P. G. High School, Vepery, in March 1907. "Prince Desing" was the piece represented. I was encouraged to write a few others of the kind by His Excellency's gracious remark on that occasion—"I should like to tell you, if I may, that it is a great pleasure to me to be here this afternoon to be a witness of the feats of the pupils whether gymnastic, dramatic or vocal music, and to congratulate them on their performance and *to thank the Tamil Pandit who took special pains on this occasion to render into Tamil the Drama which we saw so excellently rendered.*" These I now present to the public in the form of the "Tamil Dramatic Interludes."

It is hoped the book will be useful to students on occasions of prize-giving and similar functions in schools and for general reading outside the class-room.

I must acknowledge my indebtedness to M. R. Ry. Rao Bahadur L. C. Williams Pillai Avergal, B. A., F. M. U., for his very kind introduction to the book, and to the Rev. R. U. Potts, M. A., for his kind permission to dedicate it to him.

C. R. N.

DEDICATED

(BY KIND PERMISSION)

TO

THE REV. R. U. POTTS, M. A. (Oxon.)

MANAGER, S. P. G. HIGH SCHOOL, VEPERY,

AS A TOKEN OF GRATITUDE

BY

THE AUTHOR

# சிறப்புக்கவி

காஞ்சி மஹாவித்வான்

## இராமசாமி நாயுடு அவர்கள்

செய்தது

---

கமலையவன் படைத்தவேழ் பிறப்பினுண்மா
னுடப்பிறப்பே கருதி யாயினை
அமலவீ டுறற்கேற்ற கருவியெனக்
கன்கடோ வறிந்த தனை
நிமலமனைத் தினாதனுக் கெழுத்துமுன் மறைந்
சேயனை நெறியொன் பால்
விமலமொழி கடைப்பிடித்துக் குலனருளா
தியமலிகல் விபுகர்ச் சார்ந்தே

நற்பதற்கேற் பனகற்றுக் கவினுறுமக்
கல்வியினைக் காசி னிக்கட்
பொற்பமிகத் தவிச்சையிரு ளிரியமா
னவர்புந்தி புக்குலாவி
நிற்பவுயர் சொன்மேருக்கா தியமினிர்கா
டகக்கொத்து நிலவத் தந்தான்
கற்பகவே லெழிகுகன்ற டொழுமச்சி
வாயப்பேர்க் கவிய வோனே.

# INTRODUCTION

IT is a fact, and a painful one, that the study of the vernaculars is utterly neglected. The study of English, whereby one can, in these days, earn his living far more easily even with a smattering of it, than with the rarest scholarship in one of the vernaculars, has overshadowed the study of the Indian languages including Sanskrit. The decadence of vernacular study is so rapid and pronounced that it is feared a time may shortly come when Hindu students might wonder who Kamban or Kalidasa or Tiruvalluvar or Villiputhurar was, while they can discourse learnedly on Homer and Virgil, Shakespeare and Milton.

In spite of the general neglect of Tamil among other vernaculars, it is a matter for deep thankfulness that ripe scholars like Arumuga Navalar, Thamodaram Pillai, Mahamahopadhyaya Swaminatha Aiyer, and members of the Madura Tamil Sangam, have rescued from oblivion rare Tamil works that lay buried in worm-eaten cadjans, and have published them for the benefit of the Tamil-speaking people of South India and Ceylon. It is due to the labour of love bestowed by these grand scholars, and by the European admirers of Tamil like Drs. Pope and Caldwell, that the study of Tamil is still cultivated by a small minority.

Mr. Namasivaya Mudaliar is one of the very few animated by the same spirit as these great men and has been earnestly striving to do his best to promote the study of Tamil, a language, unlike the other Vernaculars, independent of any other language, and claiming for itself a hoary antiquity similar to that of the classical languages.

He has brought out, among other works, the *Dramatic Interludes*, which consist of learned dialogues on various subjects, clothed in pure, idiomatic and yet simple Tamil, removed alike from the stilted and recondite style of the Pandit as from the vulgar, colloquial style that is finding favour with people possessing not scholarship enough to appreciate and enjoy classical Tamil, pure and undefiled.

He has made the dialogues interesting and instructive in matter, and has enlivened his pages with original Tamil verse, simple and euphonious, giving a charm and variety to the whole production.

The book should be popular not only with the general reading public, but also with students who require the best specimens of Tamil literature to study and imitate.

L. C. WILLIAMS PILLAI.

# Tenali Rama:



AN INTERLUDE

# தெனாலி ராமன் :

ஒரு நாள் மஹாராஜாவின் தாயார் மரணவஸ்தையில் இரு-
க்கும்போது மாம்பழத்தின்மேல் விருப்பமா யிருப்பதாகச்
சொல்லினர். மாம்பழம் வாங்கிவரச் சென்றவர்கள் திரும்பி
வருமுன் தாயார் இறந்துவிட்டனர். அரசன் அதனால் மனங்
கவன்று பிராமண சாஸ்திரிகளை வருவித்துத் தன் தாயார்
ஆன்மாவிற்குத் திருப்தியுண்டாக என்ன செய்யலாம் என்று
கேட்டான். அதற்கு அப் பிராமணர்கள், "பொன்னால்
மாம்பழங்கள் செய்து பிராமணர்களுக்குத் தானஞ் செய்தால்
அந்த ஆன்மாவுக்குத் திருப்தி யுண்டாகும்" என்றனர்.
அரசன் அவ்வாறே செய்தான்.

இது கண்ட தெனாலி ராமன் தானும் பிராமணர்களுக்-
குப் பரிசு கொடுப்பதாய்ச் சொன்னான். பிராமணர்கள் அனை-
வரும் அவன் வீட்டிற்குள் சென்றனர். அவன் உடனே
கதவை மூடிவிட்டு ஒவ்வொருவராகப் பிடித்து, முன்னமே
காயவைத்திருந்த சூட்டுக்கோலை எடுத்துப் பேருக்கு இரண்-
டாக இழுத்து விட்டான். பிராமணர் துடிதுடித்து ஓடி
வேந்தனிடம் முறையிட்டனர். வேந்தன் தெனாலி ராமனை
வருவித்துக் கேட்கத், தெனாலி ராமன், "அரசே! தங்கள்
தாயார் மாம்பழத்தின்மேல் ஆசை கொண்டு, அதைத் தரு-
விப்பதற்குள் இறந்துவிட்டதற்காகத் தேவரீர் பொன் மாம்-
பழம் பிராமணர்களுக்குப் பரிசு கொடுத்தீர்கள். என் தாயார்
கால் வலி கண்டு, சூடுபோட்டால் தீரும் என்று சொன்னார்-
கள். சூட்டுக் கோலைக் காயவைக்கு முன் இறந்துவிட்டனர்.
அதனால், அந்த ஆன்மாவுக்குத் திருப்தி யுண்டாகப் பிரா-
மணர்களுக்குச் சூடு போட்டேன் என்றான்.

அதுகேட்டு அனைவரும வயிறும் புண்பட நகைத்தனர்.
மன்னன் சிறிது கோபத்துடன் தெனாலி ராமனைப் பார்த்து,
"இனி உன் முகத்தை நம்மெதிரில் காட்டாதே" என்றான்.
உடனே ராமன் வெளியே போய் வண்ணான் சால் ஒன்றை
எடுத்துத் தலைமேல் கவிழ்த்து முகத்தை மூடிக்கொண்டு
ராஜ ஸபைக்கு வந்தான். மன்னன், "என்ன இப்படிச்
செய்கிறாய்?" என, "அரசே முகத்தைக் காட்டவேண்டாம்
எனவே மூடிக்கொண்டு வந்தேன்" என்றான். அரசன்
"சரிதான் போ" என்று அனுப்பிவிட்டான்.

# தெனாலி ராமன்

இடம் : அரசன் சபா மண்டபம்.
காலம் : முற் பகல்.
பாத்திரங்கள் : அரசன், மந்திரிகள், பிராமணர், தெனாலி ராமன்.

பிராமணர் — (ஓடி வந்து) மஹாராஜாவே ! என்ன செய்வோம்! அந்தப் பாவி தெனாலி ராமன் எங்களை வதைய வைத்தானே ! உயிர் துடிக்கிறதே! இதை என்னவென்று கேட்கவும் திக்கில்லையா ?

அரசன் — பிராமணர்களே ! வருத்தப்பட வேண்டாம். என்ன நடந்தது? பொறுமையாய்ச் சொல்லுங்கள். விசாரித்து நியாயம் நடத்தலாம்.

பிராமணர் — என்னவென்று சொல்லுவது. சொல்ல வாயைத் திறக்கு முன், பிராணன் துடிக்கிறதே ! இந்த அனியாயமும் உண்டா ! இந்தத் தெனாலி ராமனை அடக்குவார் ஒருவரும் இல்லையா ?

மந்திரி — பிராமணர்காள் ! நீங்கள் விஷயத்தை வெளியிடாமல், வீணாகக் கூக்குரலிடுவதனால் பயன் என்ன ? பொறுமையுடன் நடந்ததைச் சொல்லுங்கள், விசாரிப்போம்.

**பிராமணர்** — ஐயோ! அதை என்னவென்று சொல்வோம். அந்த அநியாயத்தைச் சொல்கிறோம், தயை செய்து கேட்க வேண்டும் —

ஆசவல்

மன்னவா எங்கள் வருத்தந் தன்னை
என்னென் றுரைப்போம் என்னென் றுரைப்போம்
தென்னாலி ராமனும் தீயவன் இன்று
நன்னய மாக நாடியே எங்களை
அழைத்துத் தானம் அளிப்பதாய்ச் சொன்னான்
தழைத்த மனத்துடன் சார்ந்தோம் அவனை
அங்கு நடந்த அநியா யங்கள்
சங்கை யில்லாமல் சாற்றவும் படுமோ
சூட்டிக் கோலைச் சூடவே வைத்துக்
காட்டியாய் எங்களைக் கன்னையால் பிடித்து
ஆருக் கிரண்டாய் அச்ச மில்லாமல்
நீறுற இழுத்து நீட்டினன் பாரீர்
ஐயனே இந்த அக்கிர மத்தைப்
பையவே கேட்டுப் பாதகன் அந்தத்
தென்னாலி ராமனும் தீயவன் தனக்கு
மன்னிய தண்டனை வகுத்திட வேண்டும்.

**அரசன்** — பிராமணர்களே! அனைவரும் ஒன்றாகக் கூச்சலிட்டதால் விஷயம் ஒன்றும் விளங்கவில்லை. சிறிது பொறுமையோடு, யாராவது ஒருவர் நடந்த விஷயத்தை விவரமாய்ச் சொன்னால் தக்கவாறு விசாரிக்கின்றோம்.

**வெங்கையர்** — அரசே! இன்று காலையில் தெனாலிராமன் தானம் கொடுப்பதாய் எங்களை அழைத்தான். நாங்கள் சந்தோஷத்தோடு போய்ச் சேர்ந்தோம்.

சேர்ந்ததும், கதவை மூடிவிட்டு, ஒவ்வொருவராய் வரச்சொல்லி, பழுக்கக் காய வைத்திருந்த சூட்டுக் கோலை யெடுத்து வரி வரியாய் இழுத்து விட்டான். அதனால், நாங்கள் துடிதுடித்து உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓடிவந்தோம். இதுதான் விஷயம். இந்த அநியாயத்தை நன்றாய் விசாரித்து அவனுக்குத் தக்க தண்டனை விதிக்க வேண்டும்.

அரசன் — ஆ, ஹா, அந்தத் தெனாலி ராமன் இப்படிப் பட்ட அநியாயமும் செய்தானா! என்ன அநியாயம்! என்ன கொடுமை! நல்லது இருக்கட்டும், இதை நாம் தக்கபடி விசாரிக்கின்றோம். நீங்கள், உடனே நம்முடைய வைத்திய சாலைக்குப்போய் ஏற்ற சிகிச்சை செய்து கொள்ளுங்கள்.

(பிராமணர் போகிறார்கள். அரசன் மந்திரியை நோக்கி)

மந்திரி! அந்தத் தெனாலி ராமனை உடனே இங்கு அழைத்துவரச் சொல்லும்.

மந்திரி — அடா சேவகா! நீ போய் தெனாலி ராமனைச் சீக்கிரம் அழைத்து வருவாய்.

சேவகன் — இதோ ஓடிவருகிறேன் சாமீ! (ஓடுகிறான்.)

அரசன் — மந்திரி! அந்தத் தெனாலி ராமன் செய்யும் துஷ்ட காரியங்களுக்கு அளவே யில்லை. அவன் எப்பொழுதும் இப்படியே செய்து வருகிறான். அவனைத் தக்கவாறு தண்டித்தால்தான் அடங்குவான்.

மந்திரி — அரசே! அப்படித்தான் செய்யவேண்டும். விளையாட்டாகவே வினைகள் உண்டாக்குகிறான்.

(தெனாலி ராமன் வருகிறான்)

தெனாலிராமன் — அரசே ! வந்தனம் செய்கின்றேன்.

அரசன் — ஏ, தெனாலி ராமரே ! அந்தப் பிராமணர்களை என்ன செய்தீர் ?

தெனாலிராமன் — அரசே! யான் அவர்களுக்குச் சூடுதான் போட்டேன். மற்றொன்றும் செய்யவில்லையே.

அரசன் — ஆஹா! இன்னும் என்ன கொடுமை செய்ய வேண்டும் ! பிராமணர்களுக்கு இப்படிப்பட்ட துன்பமும் செய்யலாமா! நீர் பிராமணர் அன்றோ?

தெனாலிராமன் — அரசே ! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருள வேண்டும். பிறகு, என்ன தண்டனை விதித்தாலும் அடையச் சித்தமாயிருக்கின்றேன்.

அரசன் — என்ன விண்ணப்பம், சொல்லும் பார்ப்போம்.

தெனாலிராமன் — தங்களுடைய தாயார் உயிர்விடுந் தருணத்தில் மாம்பழத்தின்மேல் ஆசையாய் இருப்பதாகச் சொன்னார்கள். மாம்பழம் வாங்கி வருவதற்குள் இறந்து விட்டார்கள். அந்தம்மாளுடைய ஆன்மாவுக்குத் திருப்தி யுண்டாக்கத் தேவரீர் பொன் மாம்பழங்களைப் பிராமணர்களுக்குத் தானம் செய்தீர்கள். என் தாயார் கால் வலியினால் வருத்தப்பட்டு, சூடு போட்டால் தீர்ந்துவிடும் என்று சொன்னார்கள். சூட்டுக் கோலைக் காய வைப்பதற்குள் அந்தம்மாள் இறந்து விட்டார்கள். அந்த ஆன்மாவுக்குத் திருப்தியுண்டாக்க யான் பிராமணர்களுக்குச் சூடு போட்டேன். இது தான் என் விண்ணப்பம்.

(எல்லாரும் நகைக்கிறார்கள்.)

**அரசன்** — ஆ, ஆ, ஆ, வெகு நன்றா யிருக்கிறது! ஏ, தெனாலி ராமரே! நீர் மிகவும் துஷ்டர். இனி உமது முகத்தை நம்மெதிரில் காட்டாதீர். போம்.

[தெனாலிராமன் வெளியே போய்த் தன் தலையை ஒரு சாலினால் மூடிக்கொண்டு அரசன் எதிரில் வந்து நிற்கிறான்.]

**தெனாலிராமன்** — அரசே! வந்தனம்.

**அரசன்** — (திடுக்கிட்டு)

ஆரடா வந்தவன் இங்கே — இந்த
அநியாயம் செய்வதும் எங்கே.

**தெனாலிராமன்** —

தென்னாலி ராமனன் தானே — உம்மைத்
தென்புடன் காணவந் தேனே.

**அரசன்** —

என்னடா தென்னாலி ராமா — என்முன்
இப்படி யும்வர லாமா

**தெனாலிராமன்** —

முகத்தைக் காட்ட வேண்டாமென்றே-சொன்னீர்
முகத்தை மூடி வந்தேன் இன்றே

**அரசன்** —

வந்தால் இனி நன்றாய் வாடா — உன்னை
மன்னித்தேன் இப்போது போடா

**தெனாலிராமன்** —

ஆ, ஆ, ஆ, சந்தோஷம் ஐயா — இனி
அப்படியே செய்வேன் மெய்யா.

அரசன் — (கோபத்துடன்) சரி, சரி, ஓடிப் போ. இனி இப்படிப்பட்ட அடாத காரியங்கள் செய்யாதே.

தெனாலிராமன் — அரசே! அடாத காரியம் ஒன்றுமில்லை. சமயத்திற்குத் தக்கவாறு காரியம் செய்கிறேன். அது மற்றவர்களுக்கு விரோதமாகத் தோன்றுகிறது. பித்த சுரக்காரனுக்குக் கற்கண்டு கசந்தால் அது கற்கண்டின் குற்றமாகுமா?

அரசன் — மறுபடியும் குறும்பு பேசாதை, அகலப் போ.

(எல்லோரும் போனார்கள்.)



# Dharma Datta:





AN INTERLUDE

# இஷ்டமே நஷ்டம்:

ஓர் ஊரில் ஒரு வேளாளன் இருந்தான். அவனுக்கு ஒரே குமாரன் உண்டு. வேளாளன் தான் இறக்குந் தருணத்தில் தன் நண்பனாகிய தருமதத்தனை வருவித்து தன் குமாரனையும், தன்னிடம் இருந்த ரூபாய் பதினாயிரத்தையும் அவனிடம் ஒப்பித்து, "என் குமாரனைப் பத்திரமாய்ப் பாதுகாத்துக் கல்வி கற்பித்து, அவனுக்கு வயது வந்தபிறகு இந்தத் தொகையில் உனக்கு இஷ்டமானதை என் புத்திரனுக்குக் கொடு" என்று வேண்டினான். தருமதத்தன் அதற்கு உடன்பட்டான். பிறகு வேளாளன் காலமாயினான்.

தருமதத்தன் தன் நண்பன் குமாரனாகிய கண்ணப்பனைக் கனிவுடன் பாதுகாத்துக் கல்வி கற்பித்து வந்தான். கண்ணப்பன் வயது வந்த பிறகு, தன் தகப்பனார் வைத்த பொருளைக் கொடுக்கும்படி வேண்டினான். தருமதத்தன் ஓராயிரம் ரூபாய்தான் உனக்கு கொடுப்பேன் என்றான்.

கண்ணப்பன் இதை நியாயாதிபதியிடம் முறையிட, அவர் தருமதத்தரை வருவித்து வழக்கை விசாரித்தார். தருமதத்தன், என் நண்பர் எனக்கு இஷ்டமானதைத் தன் குமாரனுக்குக் கொடுக்கச் சொன்னார். அதனால் ஓராயிரம் கொடுக்க இஷ்டப்படுகிறேன் என்றான். நியாயாதிபதி, நல்லது ஓராயிரம் அவனுக்குக் கொடுத்தால், நீர் எடுத்துக்கொள்ள இஷ்டப்படுவது ஒன்பதினாயிரம் ஆகிறதல்லவா? உமக்கு இஷ்டமானதைத் தன் குமாரனுக்குக் கொடு என்றதனால், நீர் எடுத்துக்கொள்ள இஷ்டப்படும் தொகையை அவனுக்குக் கொடுஎன்று அர்த்தமாகிறது. ஆகையால் ஒன்பதினாயிரத்தைக் கண்ணப்பனுக்குக் கொடுத்து, ஓராயிரத்தை நீர் எடுத்துக்கொள்ளும் என்று தீர்மானித்தார்.

# தருமதத்தன்

அல்லது

# இஷ்டமே நஷ்டம்

## முதற் களம்

**இடம் :** தருமதத்தன் வீடு.

**காலம் :** காலை.

**பாத்திரங்கள் :** கண்ணப்பன், தருமதத்தன்.

**கண்ணப்பன்** — ஐயா! தாங்கள் நெடுங் காலமாக எனக்கு அன்ன வஸ்திரம் கொடுத்து அன்போடு ஆதரித்து வருகிறீர்கள். பெற்ற பிள்ளையைவிடப் பெரும் பிள்ளையாகப் பாராட்டி வருகிறீர்கள். என்னுடைய வரலாறு யாதோ தெரியச் சொல்லவேண்டும்.

**தருமதத்தன்** — கண்ணப்பா! உன் தகப்பனார் என் உயிருக்குச் சமமான உத்தம நண்பர். எங்கள் இருவருக்கும் உடல் இரண்டு, உயிர் ஒன்று. அவர் உயிர் விடுங் காலத்தில் உன்னை என்னிடம் ஒப்பித்து, நல்வழிப் படுத்தும்படி விரும்பினார். அவரிடம் அப்போது இருந்த சொத்து பதினாயிரம் ரூபாய். அதையும் என்னிடம் கொடுத்து, உனக்கு வயது வந்த பிறகு, அந்தத் தொகையில் எனக்கு இஷ்டமானதை உனக்குக் கொடுக்கும்படி சொன்னார். இது உன்னுடைய வரலாறு.

**கண்ணப்பன்** — ஆமாம், இது எனக்கும் தெரியும். ஆனால், கனவு கண்டதுபோல் இருந்தது. நீங்கள் சொல்லக் கேட்ட பிறகு தெளிவாய் ஞாபகத்திற்கு வருகின்றது. ஐயா! இப்போது தங்களுக்கு ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். இஷ்டமானால் வெளியிடுகின்றேன்.

**தருமதத்தன்** — கண்ணப்பா! ஏன் அவ்வாறு அஞ்சுகிறாய். ஒன்றும் ஒளியாமல் வெளியிடு. யான் இருக்கிற வரையில் உனக்கு என்ன குறை?

**கண்ணப்பன்** — ஐயா! அச்சமும் இல்லை, ஒளிப்புமில்லை. எனக்கு இப்போது போதுமான அளவு கல்வி கற்பித்திருக்கிறீர்கள். லௌகீகத்திற்கு வேண்டிய அளவு ஏழாவது வகுப்புடன் முடிகிறது. இந்த வருஷம் ஏழாம் வகுப்பிலும் தேர்ச்சியடைந்தேன். ஆகையால், இனி ஏதேனும் ஒரு தொழில் செய்து விருத்தியடைய நினைக்கிறேன். இன்னும் தங்களுக்குச் சிரமம் கொடுப்பது எனக்கு வருத்தமாய் இருக்கிறது. என் கருத்து இதுவே. பிறகு, தங்கள் இஷ்டம்.

**தருமதத்தன்** — தம்பி! நீ சொல்வது சரியே. உன் இஷ்டப்படியே ஒரு தொழிலில் அமர்ந்து விருத்திக்கு வருவது நல்லதே. உனக்கு மிகவும் இஷ்டமான தொழில் எது? 'உத்தியோகம் புருஷ லக்ஷணம்' என்பதும் உண்டல்லவா?

**கண்ணப்பன்** — ஐயா! உத்தியோகம் என்றால் முயற்சி. முன்னுக்கு வரவேண்டுமானால் முயற்சிவேண்டும். "முயற்சி திருவினை யாக்கும்" என்பர் மேலோர். ஆனால், ஒருவர் கீழிருந்து கைகட்டி வாய் பொத்தி

உத்தியோகம் செய்வது கஷ்டம், நிர்ப்பந்தமும் அதிகம். இக்காலத்தில் அதிகம் வாசித்தவர்களுக்கும் பத்துப் பதினைந்து ரூபாய் கிடைப்பது அரிதாயிருக்கிறது. எந்தத் தொழிலிலும் இப்போது வர்த்தகமே சிறந்த தொழிலாக இருக்கின்றது. அதில் பிரவேசிக்க எனக்கு மிகவும் விருப்பமாயிருக்கின்றது. ஆனால், தங்கள் அபிப்பிராயம் எப்படியோ?

தருமதத்தன் — தம்பி! அப்படியே செய்யலாம். ஆனால், அதற்கு முதற் பணம் அதிகம் வேண்டுமே, அதற்கு என்ன செய்வது?

கண்ணப்பன் — முதற்பணம் வேண்டுந்தான். இப்போது தாங்கள் என்னிடம் சொல்லியபடி என் தகப்பனார் தங்களிடம் வைத்த பொருளைக் கொடுத்தால், அதையே முதற் பணமாக வைக்கலாம் என்று நினைக்கின்றேன்.

தருமதத்தன் — பேஷ்! பிள்ளையாண்டான் கெட்டிக்காரனாயிருக்கிறாயே! அதற்காகத்தான் இவ்வளவு தந்திரமாகப் பேசினாயோ! கெட்டிக்காரன், கலிகாலமல்லவா! சரி, இருக்கட்டும், உன் தகப்பனார் என்னிடம் என்ன வைத்தார். ஒரு பதினாயிரம் ரூபாய் வைத்தார். அதை மாத்திரம் கணக்குப் பார்த்தாயே உனக்கு இத்தனை வருஷமாக அன்னவஸ்திரம் கொடுத்து ஆதரித்து வந்தது மல்லாமல் கல்வியும் கற்பிக்க எவ்வளவு பிடித்திருக்கும்! இதெல்லாம் நான் கணக்கிட்டால் பதினாயிரத்திற்கு இருபதினாயிரமாக ஆயிருக்குமே. ஒன்றும் பேசாதே, அகலப் போ.

**கண்ணப்பன்** — ஐயா ! ஏன் வீணாய்க் கோபிக்கிறீர்கள். என் தகப்பனார் உயிர் விடுந் தருணத்தில் தங்களோடு சொன்ன வார்த்தைகளைச் சற்று யோசித்துப் பாருங்கள்.

**தருமதத்தன்** — (கோபத்தோடு)

அடாணா ராகம்] [ஆதி தாளம்

**பல்லவி**

என்னடா யோசிப்பது — அடா பயலே
என்னடா யோசிப்பது.

**அநு பல்லவி**

சின்ன வயது முதல் - சிறு திண்டி நல்லதாய்
அன்ன வஸ்திர முனக் - களித்தது மில்லையா (என்)

**சரணம்**

பதினாயிரம் ரூபாய் — கொடுத்ததைப்
பார்த்தவனாய் போவாய்
அதிகார மாயிங்கே - ஆட்டங்கள் ஆடாதே
எதிராக வழக்கென்மேல் - எடுத்துக்கொள் நாடாதே
(என்னடா)

போ, போ, அகலப் போ. உனக்கு ஏதாவது சேர வேண்டிய திருந்தால் நியாய ஸ்தலத்தில் போய் பெற்றுக்கொள். இன்னும் இங்கு நிற்காதே, அகல நட.

**கண்ணப்பன்** — (மிகப் பணிவாய்) ஐயா ! சற்றும் முன்பின் யோசியாமல் பேசிவிட வேண்டாம். நான் அநியாயமாக ஒன்றும் கேட்கவில்லை. (பாடுகிறான்)

**ஆகிரி** ராகம்] **கண்ணிகள்.** [அட தாளம்

'பெற்ற தகப்பனிலும் - பெரிய தகப்பனுன தத்தனுரே - இதைக்
குற்றமாக எண்ணிக் - கோபித்திட வேண்டாம் தத்தனுரே.

மரித்தவர் வார்த்தையில் - மதிப்புவைத் திடவேண்டும் தத்தனுரே-எனக்
குரித்தான பொருளேயே - உதவிட வேண்டினேன் தத்தனுரே.

உத்தம நேசர்தம் - உரைப்படி நடந்திடும் தத்தனுரே - நல்ல
புத்தியுள் ளோர்வழக் - காடவும் போவரோ தத்தனுரே.

**தருமதத்தன்** — என்னடா சொன்னுன் உன் தகப்பன். எனக்கிஷ்ட மானதை கொடுக்கச் சொன்னுன். எனக்கு இஷ்டம் ஓராயிரம். இந்தா எடுத்துக்கொள். ஓடிப்போ, எதிரில் நிற்காதே.

**கண்ணப்பன்** — ஐயா! கோபிக்க வேண்டாம். கோபத்தில் நியாயம் தோற்ருது. இன்னும் கொஞ்சம் யோசித்துப் பதில் சொல்லுங்கள்.

**தருமதத்தன்** — இன்னும் என்ன யோசிக்கிறது. யோசியாமல் சொல்வதற்கு நான் மூடனல்ல. நீயா எனக்கு நியாயம் சொல்லுகிறவன். தருமத்தை எண்ணி அந்த ஆயிரமும் கொடுக்க இசைந்தேன். நீ இவ்வளவுக்கு வந்த பிறகு அதுவும் கொடுப்பதில்லை. போ, எங்கே பெற்றுக்கொள்ள வேண்டுமோ, அங்கே போய் பெற்றுக்கொள். இன்னும் என் முன்னே நிற்காதே.

**கண்ணப்பன்** — ஐயோ! கொடுத்ததைக் கேட்டால் அடுத்தது பகையா? இப்படிப்பட்ட புண்ணிய புருஷர்கள் இருப்பதனுல்தானே நியாயஸ்தலங்கள் எங்கும் நிமிஷத்துக் கொன்ருய் ஏற்படுகின்றன. என்ன செய்வது, போய் வருகிறேன். (போகிருன்)

## இரண்டாங் களம்

இடம் : நியாய ஸ்தலம்.
காலம் : பிற்பகல்.
பாத்திரங்கள் : கண்ணப்பன், நியாயாதிபதி,
தருமதத்தன்.

**கண்ணப்பன்** — ஆண்டவரே! நமஸ்கரிக்கின்றேன்.

**நியாயாதிபதி** — நல்லது, நீ யார்? என்ன சங்கதி?

**கண்ணப்பன்** — ஆண்டவரே! என் பெயர் கண்ணப்பன்.

அகவல்

என்றன் தகப்பனார் இறந்திடும் போது
துன்றிய வேறோர் சுற்றமில் லாமையால்
தன்சினே கிதராம் தருமதத் தரிடம்
அன்புட னேபதி னாயிரம் ரூபாய்
தந்துநான் திறமை சார்ந்திடும் வயதில்
இந்தத் தொகையினில் இஷ்டமா னதையே
கொடுத்தா ரியெனக் கூறினராம் அதை
அடுத்துநான் கேட்டேன் ஆயிரம் ரூபாய்
மாத்திரம் கொடுக்க மனமுண் டென்றார்
பாக்கியமான என் பாகத் தொகையை
தருமதத் துரையே தந்திடத் தீர்ப்பு
வருமெனத் தேடி யான் வந்தேன் ஐயா.

**நியாயாதிபதி** — நல்லது, நீர் அப்படி இரும். (சேவகனைப் பார்த்து) அடா சேவகா! நீ போய், அந்தத் தருமதத்தரை அழைத்து வருவாய். (சேவகன் தருமதத்தரோடு வருகிறான்)

**தருமதத்தன்** — ஆண்டவரே! சரணம்.

நியாயாதிபதி — வந்தீரா, நல்லது, தருமதத்தரே! இந்த வாதி உமக்குத் தெரியுமோ?

தருமதத்தன் — ஆம், தெரியும் ஆண்டவரே.

நியாயாதிபதி — அவருடைய தகப்பனுருக்கும் உமக்கும் நடந்த ஏற்பாடுகள் என்ன?

தருமதத்தன் — ஆண்டவரே! இந்த வாதியின் தகப்பனுர் என் உயிர்க்கு உயிரான சிநேகர். அவர் இறக்கும் போது அவரிட மிருந்த பதினுயிரம் ரூபாயை-யும், இந்தப் பிள்ளையையும் என்னிடம் ஒப்பித்து, இவனை ஆதரித்து இவனுக்கு வயது வந்த பிறகு அந்தத் தொகையில் எனக்கு இஷ்டமானதைக் கொடுக்கச் சொன்னுர். இதுதான் நடந்த ஏற்பாடு.

நியாயாதிபதி — சரி, அவர் சொன்னபடியே நீர் இப்போது செய்வதற்குத் தடை என்ன?

தருமதத்தன் — அவர் சொன்னபடியே, இது வரையில் இந்தப் பிள்ளைக்கு அன்ன வஸ்திரம் கொடுத்து ஆதரித்துக் கல்வியும் கற்பித்தேன். இப்போது நான் இஷ்டப்பட்ட தொகையைக் கொடுக்கவும் சித்தமாய் இருக்கிறேன்.

நியாயாதிப்தி — சரி, இப்போது எவ்வளவு கொடுக்கிறீர்?

தருமதத்தன் — ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன். இதை முன்னமே கொடுக்கப் போனேன். அந்தப் பிள்ளை-தான் வேண்டாமென்று மறுத்துவிட்டான்.

நியாயாதிபதி — ஆஹா, அப்படியா! எவ்வளவு தயாளம்! நீர் ஆயிரம் கொடுத்தும் வேண்டாம் என்றுரா! நல்லது, இருக்கட்டும். அந்த முழுத் தொகையை-யும் நீர் இதுவரையில் என்ன செய்தீர்?

**தருமதத்தன்** — நான் என்ன செய்தேன், வியாபாரத்தில்தான் போட்டு வைத்தேன்.

**நியாயாதிபதி** — சரி, பணத்தை மிகப் பத்திரமாகத்தான் பாதுகாத்து இருக்கிறீர். ஒன்றை இரண்டாகவும் செய்திருக்கிறீர். நல்லது, தருமதத்தரே! நீர் இப்போது வாதிக்குக் கொடுக்க இசைவது எவ்வளவு?

**தருமதத்தன்** — ஆண்டவரே! ஓராயிரம் ரூபாய் கொடுக்க இசைகிறேன்.

**நியாயாதிபதி** — அப்படியா, நல்லது, நீர் எடுத்துக்கொள்ள இஷ்டப்படுவது எவ்வளவு?

**தருமதத்தன்** — ஆண்டவரே! நான் எடுத்துக்கொள்ள இஷ்டப்படுவது ஒன்பதினாயிரம்.

**நியாயாதிபதி** — ஓஹோ, சரி. இதில் உமக்கு இஷ்டமானது ஒன்பதி னாயிரந் தானே?

**தருமதத்தன்** — ஆமாம், ஒன்பதி னாயிரந்தான்.

**நியாயாதிபதி** — சரி, உமது சிநேகிதர் உமக்கு இஷ்டமானதைத் தன் பிள்ளைக்குக் கொடுக்கச் சொன்னார். இப்போது நீர் இஷ்டப்படுவது ஒன்பதினாயிரம் ரூபாய் என்று சொல்கிறீர். ஆதலால், அந்த ஒன்பதினாயிரத்தை வாதிக்குக் கொடுத்துவிட்டு, மீதி ஓராயிரத்தை நீர் எடுத்துக்கொள்ளும், போங்கள்.

**தருமதத்தன்** — (மெதுவாய்) ஐயையோ, என் இஷ்டமே எனக்கு நஷ்டமாய் முடிந்ததே! என்ன செய்வது! (உரத்து) ஆண்டவரே! அப்படியே கொடுத்து விடுகிறேன். (கொடுத்துவிட்டுப் போகிறான்.)



# Baa-Baa:



AN INTERLUDE

# பே - பே:

கோனேரி, கோபாலன் என்னும் இரண்டு இடையர்கள் சாலையோரத்தில் உட்கார்ந்து, பாடிக்கொண் டிருந்தனர். அப்போது கோனேரியின் ஆடுகளில் ஒன்று ஓடி, ஒரு பிரபு-வின் தோட்டத்தில் புகுந்து, செடிகளை மேய்ந்து விட்டது. பிரபு, அது கண்டு, தோட்டக்காரனை ஏவி, அந்த ஆட்டைப் பிடித்துப் பட்டியில் அடைக்கச் சொன்னான்.

அப்போது கோனேரி ஓடிவந்து, தோட்டக்காரனைத் தடுத்து, தன் ஆட்டை விட்டுவிடும்படி வேண்டினான். பிரபு விரைந்து வந்து, கோனேரியைத் தடியாலடித்துக் காயப்-படுத்தினான். அடிபட்ட கோனேரி கூக்குரலிட்டு ஓடிவந்து கோபாலனிடம் நடந்ததைக் கூறினான். கோபாலன் வழக்-குத் தொடுக்கும்படி கோனேரியைத் தூண்டினான்.

பின்பு, கோனேரி ஒரு வக்கீலிடம் போய் முறையிட்டு, பிரபுவின்மேல் வழக்குத் தொடுக்கவேண்டும் என்றான். வக்கீல் அதற்கு நூறு ரூபாய் செல்லும் என, கோனேரி தன்னிடமிருந்த ஐந்து ரூபாயைக் கொடுத்து, மற்றத் தொகையைப் பிறகு கொடுப்பதாய்ச் சொன்னான். நெடு நாளாக வருமானமற்ற அவ் வக்கீல், அதற்கு ஒப்புக்கொண்டு கோனேரியைப் பார்த்து, "நியாயாதிபதி உன்னை என்ன கேட்டாலும் 'பே-பே' என்று கத்து" எனக் கற்பித்துக் கொடுத்தான். பிறகு, நியாய ஸ்தலத்திற்குப் போனார்கள். நியாயாதிபதி கேட்டதற் கெல்லாம் கோனேரி, 'பே-பே' என்று கத்தினான். அதன் மேல் கோனேரியின் வக்கீல் எழுந்து, "ஐயா! பிரதிவாதி வாதியை அடித்த அதிர்ச்சியால் மூளை சிதறி இந்தக் கதி நேர்ந்தது என்றான். நியாயாதிபதி அதை நம்பி அந்தப் பிரபுவுக்கு அபராதம் விதித்ததுமன்றி கோனேரிக்கு 50 ரூபாய் இனாமும் வாங்கிக் கொடுத்தார்.

நியாய ஸ்தலத்தை விட்டு வெளிவந்த பிறகு, வக்கீல் பாக்கியைக் கொடுக்கும்படி கேட்க, கோனேரி "பே - பே" என்று கத்தினான். பின்பு வக்கீல் என்ன கேட்டாலும் கோனேரி "பே - பே" என்றுகத்தவே, வக்கீலுக்கு வெறுப் புண்டாகிப் போய்விட்டான். கோனேரி வக்கீலை ஏமாற்றிய சந்தோஷத்துடன் வீடுபோய்ச் சேர்ந்தான்.

# பே - பே

**இடம் :** சாலை யோரமும், பிரபுவின் வீடும்.
**காலம் :** காலை
**பாத்திரங்கள் :** கோனேரி, கோபாலன், தோட்டக்காரன், பிரபு.

[இரண்டு இடையர்கள் பாதையிலுள்ள மரத்தடியினில் சந்திக்கிறார்கள்.]

**கோனேரி** — அண்ணே ! ஊதெ காத்தடிக்குது; இப்படி வாயேம், குளுரு காயலாம். சூரியெம்கூட கரகரெண்ணு வருதே.

**கோபாலன்** — தோ வந்தேம், அண்ணெம் உனுக்கு பாடத் தெரிஞ்சா என்னமாவது ஒண்ணு பாடேம்.

**கோனேரி** — ஆஹா, பாட்ரேம் கேக்கிறயா, கேளு.

பாட்டு

மழையை நம்பி மண்ணிருக்க ஏலேலோ - ஏலசா
மண்ணை நம்பி மரமிருக்க ஏலேலோ - ஏலசா
மரத்தை நம்பி கிளையிருக்க ஏலேலோ - ஏலசா
கிளையை நம்பி தழையிருக்க ஏலேலோ - ஏலசா
தழையை நம்பி ஆடிருக்க ஏலேலோ - ஏலசா
ஆட்டை நம்பி நாமிருக்க ஏலேலோ - ஏலசா
பலே - ஏலசா.

**கோபாலன்** — நல்லாக்கீது அண்ணே ! இரு, நாம் சின்னப் பையனா யிருக்காலே, பள்ளிக்கூடத்திலே சொல்லிக் குடுத்தாங்க ஒரு பாட்டு, நம்ப ஆட்டு மேலே, அத்தெ நாம் சொல்றேம் கேளண்ணே !

"சக்கிலிச் சிங்காரப் பாட்டு" மெட்டு.

நானு நன்னுனே - நன்னுனே நன்னுனே
நானு நன்னுனே - நன்னுனே நன்னுனே.

பல்லவி

ஆட்டைப் போலொரு - அடக்கமான மிருகம்
நாட்டிலாவது முண்டோ - காட்டிலாவது முண்டோ

தெம்மாங்கு

சூதொன்றும் அறியாது - சுருக்கிலோடத் தெரியாது
ஏதொன்றுங் குறியாது - இனத்தைவிட்டுப் பிரியாது

சிந்து

கொம்போ நீண்டிருக்கும் - குளம்போ பிளந்திருக்கும்
கும்பாய் மேய்ந்திருக்கும் - குட்டிகள் போட்டிருக்கும்
சொம்பாய் மடியிருக்கும் - சோலைக்குள் படுத்திருக்கும்
தென்பாய் பார்த்திருக்கும் - தின்றவா யசைத்திருக்கும்
சிறுத்திருக்கும் - பெருத்திருக்கும்
கறுத்திருக்கும் - வெளுத்திருக்கும்
(ஆட்டைப் போலொரு)

கோனேரி — ஆஹா, நல்லாரிக்கு அண்ணே! (சுற்றிப் பார்த்து) ரவ இரண்ணே! எங்கெ அந்த லவிண்டி ஆட்டுங்களெ காணமே.

கோபாலன் — (தூரப்பார்த்து) தோ அங்கிட்டாலே மேய்தே பாத்தியா! ஐயையோ! அந்தப் புள்ளெ ஊட்டு போக்கடையிலே பூட்டுசே; அவெం கொண்ணூடுவானே யப்பா! அவனுக்கு நெஞ்சிலே ரவெகூட ஈரம் இக்குமா! அண்ணே, போயி ஓட்டியா.

கோனேரி — தோ ஓடிபோயி ஓட்டியார்ரேం (ஓடுகிறான்)

பிரபு — (ஆடு மேய்வதைப் பார்த்து) அடே, தோட்டக்காரா! எங்கே போயிருந்தாய்? போக்கிரிப் பயலே! அதோ பார், தோட்டத்தில் அந்த ஆட்டை; அது யாருடையது? அதை ஓட்டிக் கொண்டுபோய்ப் பட்டியில் அடை, சீக்கிரம்.

தோட்டக்காரன் — (உடம்பை சுளித்துக் கொண்டு கைகூப்பி) ஏவெ சருவுக்கும் பொயலெ நாம்புக்கும் தோ அங்கே போயிருந்தெநே. இதோ ஓட்டி அடக்கிறெநெனுங்க (ஓடி ஆட்டை) டுர், டுர், டுர் (என்று ஓட்டுகிறான்.)

கோணேரி — (வந்து) அண்ணே! தோட்டக்கார அண்ணே! வாயில்லா ஜீவண்ணே. தெரியாதெ வந்துடுச்சி. உட்டுடண்ணே, கும்பிடறெநெ அண்ணே!

தோட்டக்காரன் — அடே அவெெ கொலபாதவெெ, பாத்துகினுகிறா, வந்தா கொண்ணுடுவாெ (என்று சொல்லிக் கொண்டே ஆட்டை) டுர், டுர், டுர், (என்று ஓட்டுகிறான்)

கோணேரி — வாணண்ணே! வாணண்ணே! (மறிக்கிறான்)

பிரபு — (வந்து) யார்ரா நீ பயலே! ஆட்டைவிட்டது மில்லாமே, ஆளை வந்து தடுக்கிறயா! இரு படவா உதைக்கிறேன் பார் உன்னை .... (தடியை ஓங்குகிறான்)

கோணேரி — (பிரபுவின் காலில் விழுந்து) ஐயோ! நாெ ஏழெ, உட்ருங்கோ, வாயில்லா ஜீவெெ. உங்க காலுக்கு கும்பிட்றேெ. வுட்டுருங்க (காலைப் பிடித்துக் கொள்கிறான்)

பிரபு — அடே, இடப்பயலே! காலை விடுகிறயா? உதை வேணுமா? (தடியால் ஓங்கித் தலையில் அடிக்கிறான்)

கோணேரி — ஐயோடி! அம்மோடி! ஐயையோ! ஐயோ! எம் மண்டெ பூட்சே! அடே உங்கூடு குட்டிச் செவுரா போவ. ஐயையோ! (அழுகிறான்)

**பிரபு** — என்னடா வாயில் வந்தபடி யெல்லாம் பிதற்று கிறாய்? (பட், பட் என்று மேலும் அடித்து) போ நாயே, ஓடிப்போ கழுதை. (திரும்பிப் போய் விடுகிறான்)

**கோனேரி** — ஐயையோ! உங்க ஊட்டுலே எருக்கு மொளெக்கோ! நீ பாயா போவோ.

(மண்ணை வாரித் தூற்றுகிறான்)

**கோபாலன்** — இன்ன அண்ணே சேதி? ஐயையோ, தலை-யிலே நத்தங்கூட ஒயுவுதே! இரு, இந்த சீலெயெ கட்றேம். கட்டுகிறான்)

**கோனேரி** — தோ பாரு நத்தத்தே, அவெம் ஊடு பாயா போவொ. தடியெடுத்து தலெயெ பொளந்து பூட்டானே பாவிமவெம். ஆட்டெயும் புடிச்சி அடச்சிகிறானே. ஐயொ! நோவுதே. (அழுகிறான்)

**கோபாலன்** — அண்ணே, அயாதே. நீ பிராது கொடுத்திடு, அவன் கெட்டான் தாயி. நாம் சாக்கி சொல்றேம்.

**கோனேரி** — தோ போறேம் அண்ணே, சும்மா வுட்ரனு அவனெ பாரு. (போகிறான்.)



## இரண்டாங் களம்

இடம் : வக்கீல் வீடு.
காலம் : பிற் பகல்.
பாத்திரங்கள் : கோனேரி, குமஸ்தா, வக்கீல்.

**கோனேரி** — (குமஸ்தாவைப் பார்த்து) ஐயே ! இங்கெ வைக்க ஆரு? வைக்க.

**குமஸ்தா** — யாரடா அவன், என்னடா விலை வைக்கோல்?

**கோனேரி** — இல்லையா, வைக்க எங்கெ, ஒரு கேசு இக்குது.

**குமஸ்தா** — அடடா, வக்கிலா! அடே வக்கீல் என்று சொல், வைக்க என்று சொல்லாதே. நாம் வக்கீல்-தான். உன்னுடைய கேசு என்ன? சொல் கேட்-போம்.

**கோனேரி** — ஐயே ! அந்த பங்காளா கிங்காளா வைச்-சுக்கினு, அதோ அந்தத் தெருவுலே, ஊருக்கு அப்பாலே, தொப்பையா ஒரு ஐயெப இருக்காப பாரு, என்னையா, ஆடு வந்துடுச்சிண்ணு, எபதலை-யெ பொளந்து பூட்டாப. ஐயா! நத்தத்தெ பாரியா.

**குமஸ்தா** — ஓஹோ, சரி சரி, தெரிகிறது. யாரந்தப் பிரபு, வணங்காமுடி வல்லாளகண்டப் பிள்ளையோ — அவன் கெட்ட திருட்டுப் பயலாச்சே, அவன் எப்போதும் ஏழைகளை இப்படித்தான் செய்-கிறான், எனக்கும் தெரியுமே.

**கோனேரி** — ஆமையே, அவன்தானய்யெ, உடாதையே.

**குமஸ்தா** — சரி, உன் பெயரென்ன ?

**கோனேரி** — எம் பேரு கோனேரி.

**குமஸ்தா** — சரி, யாராவது சாட்சிகள் இருக்கிறார்களா?

**கோனேரி** — ஓ இருக்கிறாம் கோவாலெம். அந்த ஐயெம் தோட்டக்காரனெ கேட்டா கூட சொல்லுவாம்.

**குமஸ்தா** — அடெ, தோட்டக்காரன் இருக்கட்டும். உன் மனிதன் யாராவது உண்டா?

**கோனேரி** — ஏம் மனசெம்தாம் கோவாலெம் இருக்கிறாம்.

**குமஸ்தா** — பேஷ், உனக்கு கேசு ஜயிக்கும். என்ன பீசு கொடுப்பாய்?

**கோனேரி** — என்ன பீசு, ஆட்டு பீசலா? மாட்டு பீசலா?

**குமஸ்தா** — முட்டாள், ஆடு மாடு பீசுவதல்ல, பீசு என்றால் பணம்.

**கோனேரி** — பணமா! என்னையா, நாம் ஏயெ, வவுத்துக் கில்லாதவெம், அஞ்சு ரூவாதாம் இக்குது, அந்த எம்மவனெ எப்படியாறு மாட்டிடணும்.

**குமஸ்தா** — சரிதான், இது எந்த மூலைக்கு! இது இன்றைய வக்காலத்துக் காசு. வக்கீலுக்குப் பீசு நூறு ரூபாயும், நமக்கு இருபத்தைந்து ரூபாயும், எழுத்துக் கூலி பதினைந்து ரூபாயும், ஆக ரூபாய் நூற்று நாற்பதும் கொண்டு வந்தால், அவனை ஜெயிலில் வைத்து விடலாம்; தடையில்லை. தெரியுமா? புதுசா சீமைக்குப் போய்ப் படித்து பாரிஸ்டர் பாசுபண்ணி வந்திருக்கிறார். அவரைக் கண்டாலே மாஜிஸ்திரேட்டுக்கு காபராதான். பார்த்தாயா அந்தக் கண்ணாடி அலமாரிகளை? புஸ்தகங்களைப் பார்த்தாயா? பத்துப் புஸ்தகத்தைத் தூக்கிக் கொண்டு போய்க் கச்சேரி மேஜைமேலே போட்டால், எல்லாருக்கும் நடுக்கந்தான். அவர்

ஐந்நூறு ரூபாய்க்கு குறைந்த பீசுக்கே வா-மாட்டார். நீ ஏழை என்பதால், உனக்காக நான் சொல்லி, இந்தக் குறைந்த பீசுக்கு ஏற்பாடு பண்-ணுவதாகச் சொல்லுகிறேன். அவருக்கு மாசம் ஒன்றுக்கு பதினாயிரத்திற்குக் குறையாமல் வரு-கிறது. அவர் என்ன செய்கிறார் பார்த்தாயா? அதோ ஜன்னலால் பார்.

**கோனேரி** — அல்லாஞ் சரிதாயா, அம்மாத்தம் பணம் ஏதையா? ஆடுங்களை எல்லாம் வித்தா கூட அம்-மாத்தங் காணுமா, நாம் ஏழெ ஐயா.

**குமஸ்தா** — அது சரிதான், உன்னைப் பார்க்கும்போதே ஏழை யென்று தெரிகிறது. ஆனாலும் நான் வக்-கீல் அல்ல, வக்கீல் குமஸ்தா. நீ நல்லவனாயிருப்-பதனால் 75 ரூபாய் வக்கீலுக்கும், நமக்கு 25-ம் எழுத்துக் கூலிக்கு 15-ம் கொடுப்பதாய் இருந்-தால் பார். இல்லாவிட்டால் ஓடு. எங்கேயாவது போய் கெட்டலே. இந்தா உன் அஞ்சு ரூபாய்.

**கோனேரி** — இல்லேயா, கும்பிட்டேரம் ஐயா, அத்தெ வச்-சிக்கோ ஐயா. நாம் அந்த குட்டிங்களை அல்லாம் வித்தாவது கொண்ணாந்து குடுத்துட்றேம். ஐயா, நீ மின்னே போட்டு நடத்தேம், அப்பறம் தாரேம்.

**குமஸ்தா** — சரி, ஆகட்டும். உனக்குக் கையெழுத்துப் போடத் தெரியுமா? இந்த வக்காலத்தில் ஒரு கையெழுத்துப் போடு.

**கோனேரி** — எனக்கு எய்த தெரியுமா! ஐயோ சாமி.

**குமஸ்தா** — ஆனால், இந்தப் பேனாவைத் தொடு.

**கோனேரி** — யப்பா! நாம் தொடேம். பேனா யானா கடிக்கும்.

**குமஸ்தா** — சீ, பேய் நாய் அல்ல; பேனு என்றால் எழுது-கிற கோல்; இதைத் தொடு.

**கோனேரி** — அப்பிடியா, ஆனு தோ தொட்றேம்.

**குமஸ்தா** — சரி, வா கூடவே, வக்கீலிடம் போகலாம்.

(வக்கீலிடம் போய் வணக்கமாய் நிற்கிறார்கள்.)

**வக்கீல்** — என்ன குமஸ்தா! இன்றேனும் ஏதாவதுண்டா? பிரதி தினமும் இப்படியே போகிறதே வீணுக.

**குமஸ்தா** — இல்லை, இன்றைக்கு ஒரு நல்ல கேசு வந்து இருக்கிறது. பீஸ் 50 ரூபாய் பேசியிருக்கிறேன். இதோ வக்காலத்து பாருங்கள். பிளெயிண்டும் தயாரா யிருக்கிறது.

**வக்கீல்** — கேசு உண்மை யானது தானே? அதை நன்றாய் விசாரித்தீரா?

**குமஸ்தா** — உண்மை யென்றே தோன்றுகிறது. ஆனால் பிரதிவாதி வணங்காமுடி வல்லாளகண்ட பிள்ளை. தெரியுமே தங்களுக்கு, இந்தப் பக்கத்தில் அவனே பெரிய பணக்காரன். அவன் கில்லாடிப் பயல், நமக்காகவேண்டிய தென்ன? நல்ல பீசாயிருக்-கிறது. இந்த ஆறுமாதமாய் ஒரு காசும் வரும்-படி யில்லாதது எனக்கு மெத்தவும் வருத்தம். இன்று காலை முதல் தேடிக்கொண்டு போய், இதற்குப் புலம் வைத்து, இந்தப் பேர்வழியைப் பிடித்துக் கொண்டுவந்தேன்.

**வக்கீல்** — நல்லது இருக்கட்டும், யாரடா அவன் கோனுன், இங்கு வா.

**கோனேரி** — கும்பிடரேன் சாமீ. சாமீ! ஏ௦ தலெயெ ரவெ பாருங்கோ (அழுகிறான்.)

வக்கீல் — சரி, பயப்படாதே, உன் கேசு நல்ல கேசு. நாம் ஜயித்துத் தருகிறோம். (சற்று மூக்குமேல் விரல் வைத்து யோசித்து,) உனக்கு ஆடுபோல் கத்தத் தெரியுமா ?

கோணேரி — ஓ தெரியுஞ்ஜாமி.

வக்கீல் — எதோ கொஞ்சம் கத்து, பார்ப்போம்.

கோணேரி — பே எ எ, பே எ எ, பே எ எ.

வக்கீல் — பேஷ், நன்று யிருக்கிறது. கோர்ட்டுக்கு வந்து துரை என்ன கேட்டபோதிலும் இதே மாதிரி கத்து. வேறு ஒன்றும் வாயைத் திறவாதே. இருக்கட்டும், பீஸ் எப்போது தருகிறாய் ?

கோணேரி — நல்லதையா, அப்பிடியே கத்தரேன். நாம கேசுக்கு வர்ரனே அப்ப பணந் தாரேமயா. அந்த ஆளெ மாத்தம் எப்படியாறு மண்ணுக்கு போட்டு வெக்கணும் சாமி.

வக்கீல் — சரி, அதற்கென்ன, அப்படியே செய்யலாம். வரும்போது மறவாமல் பணம் கொண்டுவா.

(கோணேரி போகிறான்.)

குமஸ்தா — அப்பா ! நரி முகத்திலே விழித்தேனையா இன்றைக்கு. இந்த ஒரு வருஷ காலமா ஒரு காசு உண்டா ! இன்று எதோ நமக்கு நல்ல காலம் வந்தது.



## மூன்றாங் களம்

**இடம் :** நியாய ஸ்தலம்.
**காலம் :** பிற் பகல்.
**பாத்திரங்கள் :** கோனேரி, குமஸ்தா, மாஜிஸ்திரேட், வக்கீல், பிரபு (பிரதிவாதி) முதலியோர்.

[சேவகன் மேஜைமேல் காகிதம், பேனா, மைப் புட்டி முதலியவைகளை வைக்கிறான்.]

**சேவகன்** — விஜயமார்த்தாண்ட, உத்தண்ட, கோதண்ட உக்கிர, வீரவைராக்கிய, மாஜிஸ்டிரேட் எஜமான் வருகிறார். ஒதுங்கி நில்லுங்கள்.

[மாஜிஸ்திரேட் வந்து ஆசனத்தில் உட்காருகிறார். குமஸ்தா வந்தனம் செய்து, காகிதக் கட்டைக் கொடுக்கிறார்.]

**வக்கீல்** — (வந்து வந்தனம் செய்து) துரையே, நான் 8912 ஆம் நெம்பர் கேசில் வாதி கோனேரிப் பிள்ளைக்கு ஆஜராகிறேன்.

**மாஜிஸ்திரேட்** — சரி, நீங்கள் இவ் வூருக்குப் புதிதோ?

**வக்கீல்** — இல்லை துரையே, யான் இங்குவந்து ஒரு வருஷமாகிறது. சமுகத்துக்கு வரத்தக்க சமயம் இது வரையில் நேரிடவில்லை.

**மாஜிஸ்திரேட்** — சரி, குமஸ்தா! வாதி பிரதிவாதிகளைக் கூப்பிடும்.

**மாஜி - குமஸ்தா** — (சேவகனைப் பார்த்து) கூப்பிட்ரா.

**சேவகன்** — வாதி கோனேரிப் பிள்ளை ள ள.

**கோனேரி** — (வந்து நின்று பேசாமல் கும்பிடுகிறான்)

**சேவகன்** — பிரதிவாதி வணங்காமுடிப் பிரபு வல்லாள கண்ட பிள்ளை எ எ.

**பிரதிவாதி** — ஐயா, ஆஜர்.

**மாஜிஸ்திரேட்** — (வாதியைப் பார்த்து) உன் பெயர் என்ன ?

**கோனேரி** — பே, பே, பே.

**மாஜிஸ்திரேட்** — உன் தகப்பன் பெயர் என்ன ?

**கோனேரி** — பே, பே, பே.

**மாஜிஸ்திரேட்** — (வக்கீலைப் பார்த்து) என்ன ஐயா இழவு, உமது கட்சிக்காரன் இப்படிக் கத்துகிறானே.

**வக்கீல்** — எனது கட்சிக்காரன் நன்றாய்ப் பேசிக்கொண்டிருந்தவன்தான். பிரதிவாதியாகிய வல்லாள கண்டப் பிள்ளை அடித்த தடியடியினால் மூளை சிதறி, அன்று முதல் பேசுந்திறமை யிழந்து, இவ்வாறு ஆட்டைப்போல் கத்துகிறான். இதைக் கோர்ட்டார் யோசித்துப் பிரதிவாதிக்குத் தக்க தண்டனை விதிக்க வேண்டுகிறேன்.

**மாஜி - குமஸ்தா** — (பிரதிவாதியைப் பார்த்து நான் சொல்வதுபோல் சொல்லும்) சர்வ சக்தி யுள்ள சுவாமி முன்பாக, நான் சொல்லுவது எல்லாம் நிஜம். நிஜந் தவிர வேறு இல்லை. (பிரதிவாதி கூடவே சொல்கிறான்)

**மாஜிஸ்திரேட்** — உம்முடைய பெயரென்ன ?

**பிரதிவாதி** — என் பெயர் வணங்கா முடிப் பிரபு வல்லாள கண்டப் பிள்ளை என்று சொல்வார்கள்.

**மாஜிஸ்திரேட்** — வணங்காமுடிப் பிரபுவா நீர் ? நல்லது நீர் இருப்பது எந்த ஊர் ?

**பிரதிவாதி** — நான் இருப்பது இந்த வூர்தான்.

**மாஜிஸ்திரேட்** — சரி, வாதி கோனேரிப் பிள்ளைக்கு இரத்தக் காய முண்டாக நீர் தலையில் அடித்ததுண்டா?

பிரதிவாதி — இல்லை, இல்லை அந்த நாயை நான் அடிக்கவு மில்லை, பேசவு மில்லை. அவனுடைய ஆடு என் தோட்டத்தில் வந்தது. என் தோட்டக்காரனைக் கூப்பிட்டு அந்த ஆட்டைப் பிடித்துப் பட்டியில் அடைக்கச் சொன்னேன். அவன் ஆட்டை ஓட்டினான். அப்போது இவன் வந்து மடக்கினான். அதனால் எனக்குக் கோபம் பிறந்து ஒரு தட்டுத் தட்டினேன்; அவ்வளவு தான்.

மாஜிஸ்திரேட் — ஓ போதும், உம்முடைய வாக்மூலத்தினாலேயே, உம்மீது குற்றம் நன்றாய் ஏற்படுகிறது. இதற்குச் சாட்சியும் வேண்டுவதில்லை. நீர் நிற்கும் மாதிரி, பேசும் விதம் முதலியவற்றைப் பார்த்தால், கோர்ட்டாரையே நீர் அவமதிக்கிறவராய்த் தோன்றுகிறது. இது முதல் தடவை யாதலால், உம்மை இப்போது மன்னித்து அபராதம் (Fine) போட்டிருக்கிறோம். அடுத்த தடவை இப்படி நேர்ந்தால் இவ்வித நடவடிக்கைக்குக் கடூர தண்டனை விதிப்போம். இப்பவும் உமது பேரில் வந்திருக்குங் குற்றம் ருஜுவாய் விட்டபடியால், இந்தியன் பினல் கோட் 146-ஆவது செக்ஷன்படி 500 ரூபாய் அபராதமும், வாதிக்கு நேர்ந்த நஷ்டத்திற்காக அவனுக்கு 50 ரூபாய் இனாமும் கொடுக்கவேண்டு மென்பது இந்தக் கோர்ட்டார் தீர்ப்பு.

பிரதிவாதி — இவ்வளவுதானே (இரண்டு நோட்டு கொடுக்கிறான்)

(கோர்ட்டு கலைகிறது)



## நான்காங் களம்

**இடம் :** வக்கீல் ஆபீஸ்.
**காலம் :** பிற் பகல்.
**பாத்திரங்கள் :** வக்கீல், குமஸ்தா, கோனேரி, கோபாலன்.

வக்கீல் — ஏ, கோனேரி பிள்ளே! பீஸ் எங்கே?

கோனேரி — பே, பே, பே.

வக்கீல் — போதுண்டா கத்தினது, பணம் எங்கேடா? இனிப் பேசலாம், வாயைத் திறந்து சொல்லு.

கோனேரி — பே, பே, பே.

வக்கீல் — (கையைப் பிடித்திழுத்து) இன்னும் சும்மா கத்தாதே, பணம் எங்கே? சொல்லு.

கோனேரி — பே, பே, பே.

வக்கீல் — போடா சனியன் (என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளி) நான் சொன்ன யுக்தியாலே எனக்கும் நாமம் போடுகிருயே. (குமஸ்தாவைக் கூப்பிட்டு) இதென்ன சனியனு யிருக்கிறது; பாக்கிப் பணத்தைக் கேட்டு வாங்கும். (உள்ளே போய்விடுகிருன்)

குமஸ்தா — என்னடா அது, பணம் எங்கே?

கோனேரி — பே, பே, பே.

குமஸ்தா — பாடம் படித்தது போதுண்டா. வாயைத் திறந்து பேசு. என்ன சொல்கிருய் பணத்திற்கு?

கோனேரி — பே, பே, பே.

**குமஸ்தா** — கேசு ஜயித்து, பணமும் வந்ததே, இன்னும் என்னடா? ஆட்டையும் விற்கவேண்டாம். வந்த பணத்தை யாவது கொடு.

**கோனேரி** — பே, பே, பே.

**குமஸ்தா** — இதேது, ஆபத்தாய் முடிந்தது. தீட்டின மரத்திலேயே கூர் பார்க்கிறதாய் ஏற்பட்டது. என்னடா அது, பேசுகிறாயா? உதை வேணுமா?

**கோனேரி** — பே, பே, பே.

**குமஸ்தா** — ஏது, 'உனக்கும் பே பே, உன் தாதாவுக்கும் பே பே' என்ற கதையா யிருக்கிறதே. பாக்கிப் பணத்தை கொடுக்கப்போகிறாயா? இல்லையா?

**கோனேரி** — பே, பே, பே.

**குமஸ்தா** — சரி, சரி, உன்னைத் தூஷிக்க வேண்டியதில்லை. எனக்குப் புத்தியில்லாமற் போயிற்று. முன்னமே பணத்தைப் பெற்றுக்கொண் டிருந்தால், இந்தப் பாடில்லையே. "குதிரை செத்தது மல்லாமல், குழி தோண்டப் பத்துப் பணம்" என்பதுபோல், உன்னோடு மல்லுக் கொடுப்பதில் என் தொண்டை போவதல்லது வேறு பயனில்லை. எப்படியாவது ஒழிந்து போ.

(குமஸ்தா உள்ளே போகிறான். கோனேரி ஓட்டம் பிடிக்கிறான்.)

**வக்கீல்** — என்ன சங்கதி? பணம் வந்ததா?

**குமஸ்தா** — எங்கே வந்தது! நாம் ஓதின பாடத்தை, நமக்கே திருப்பி ஓதுகிறான். என்ன செய்வது, இதுவரையில் பேசித் தொண்டையும் உலர்ந்தது. இதுதான் கண்ட பலன்.

**வக்கீல்** — அடாடா, என்ன காலம்! இந்த ஊருக்கு வந்து ஒரு வருஷ காலமாக ஒரு காசும் கையில் வந்த

பாடில்லையே. பொய்யைப் போதிப்பதனுல் பொருள் பொருந்த வில்லைபோ லிருக்கிறது. ஐயோ என் துரதிர்ஷ்டமே! சரி,போம்.(போகின்றுன்.)

**கோபாலன்** — (கோனேரியைப் பார்த்து) ஏ௦ அண்ணே, என்ன ஆச்சி வயக்கு ?

**கோனேரி** — அண்ணே, அடி பட்டாலும் பட்டுகினே௦, அம்ப்து ரூபா அம்புடுசி. அந்த வைக்கப்பய ஒரு உத்தி சொன்னு௦. என்னுண்ணுக்கா, ஒண்ணும் பேசாதே, தொரெ என்னு கேட்டாலு௦ பே-பே இண்ணு இந்தக் குட்டிங்களாட்ட௦ கத்தண்ணு௦. அப்டியே கத்தனே௦. இதோ பணம் அம்புட்டு போச்சி பாரு. அந்த வைக்கப் பய, தொப்பக் கூத்தாடியாட்டம் வேசம் போட்டுக்கினு வந்து, பணம் எங்கிடா இண்ணு மடியைப் புடிச்சிகூட இயுத்தா௦. அவெ௦ சொன்னுப்பிலெயே உனுக்கு௦ பே - பே, உங்க தாதாவுக்கு௦ பே - பே இண்ணு கடுக்கா குடுத்தூட்டு ஓடியாந்தூட்டே௦. வாடா ரெண்டு கள்ளுதண்ணியெ வாயிலே ஊத்திக்கலா௦.

(போகிறுர்கள்.)



# Learned Fools:



AN INTERLUDE

# கற்றறி மூடர்:

ஐந்துபேர் சாஸ்திரிகள், பரிசு பெற ஓர் அரசனை நாடிச் சென்றனர். அவர்கள் அரசன் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் சாதுரியமாய் விடை கூறினர். அரசன் மந்திரியை நோக்கி, அவர்களது கல்வியறிவு எப்படிப்பட்டது என்று கேட்க, மந்திரி, "அரசே! இவர்கட்கு லோகஞானம் சிறிதும் இல்லை. இவர்களைப் போய் சமைத்துச் சாப்பிட்டு வரக் கட்டளையிட்டால் அதன் விவரம் தெரியவரும்" என்றான். அரசன் சாஸ்திரிகளுக்கு அவ்வாறே கட்டளையிட்டான்.

சாஸ்திரிகள் சமைத்துச் சாப்பிட வெளியே சென்று, சிறிது நேரஞ்சென்று, அரசன் சமுகத்தை யடைய, அரசன் போசன மாயிற்றோ என்று கேட்டான். எல்லாம் அனுகூலப்பட்டும் சமைத்துச் சாப்பிட முடியாமற் போயிற்று என்றனர். அரசன் ஏனென்று கேட்க, அவர்களில் சங்கீத சாஸ்திரி "அரசே! சாதம் கொதிக்கையில் சத்தம் உண்டாயிற்று. அது ஒரு தாளத்திற்கும் ஒத்து வராமையால், பானையை உதைத்து உருட்டிவிட்டு வந்து விட்டேன்" என்றான். வைத்திய சாஸ்திரி, "அரசே! நான் பதார்த்தம் வாங்கச்சென்றேன். அங்கு வாதபித்த சிலேத்துமங்கள் சம்பந்தப்படாதது ஒன்றும் காணப்படாமையால் வாளா வந்து விட்டேன்" என்றான். தத்துவசாஸ்திரி, "அரசே! யான் தொன்னையில் நெய்வாங்கி, தொன்னைக்கு நெய் ஆதாரமா? நெய்க்கு தொன்னை ஆதாரமா? எனச் சந்தேகித்துத் தொன்னையைத் தலை கீழாய்க் கவிழ்த்துப் பார்த்தேன். நெய் முழுதும் ஒழுகிப்போயிற்று" என்றான். இலக்கண சாஸ்திரி, "அரசே! நான் தயிர் வாங்கப்போனேன். தயிர் விற்பவன் "தயிரோ—தயிர்" என்று ஓகாரத்தை மிகவும் நீண்டொலிக்கக் கேட்டு, வரம்பு கடந்ததை வாங்கப்படா தென்று திரும்பி விட்டேன்" என்றான். ஜோசியர், "அரசே! நான் இலை பறிக்கப் போனேன். மரத்தில் பல்லி சொல்லிற்று. அது துர்க்குறி என்று கண்டு திரும்பி விட்டேன்" என்றான்.

அரசன் முதலாயினோர் அது கேட்டு நகைத்தனர். பிறகு அரசன் சாஸ்திரிகளைப் பார்த்து, "ஐயன்மீர்! லோகஞான மில்லாமல், சாஸ்திர ஞானம் சிறிதும் பயன்படாது. நீவிர் உலகத்திற் பழகி அதை உணரவேண்டும்" என்று புத்தி புகட்டியதுமன்றி, சிறிது பரிசுமளித்து அனுப்பினான்.

# கற்றறி மூடர்

## முதற் களம்

**இடம் :** ராஜ ஸபா மண்டபம்.
**காலம் .** காலை.
**பாத்திரங்கள் :** அரசன், மந்திரி, இலக்கண சாஸ்திரி, வைத்திய சாஸ்திரி, தத்துவ சாஸ்திரி, சங்கீத சாஸ்திரி, ஜோதிட சாஸ்திரி.

**மந்திரி** — அரசே ! தாங்கள் பிறந்த நாளாகிய இன்று, சாஸ்திரிகளுக்குப் பரிசளிக்கப்படும் என்று வெளியிட்டபடி, அநேக சாஸ்திரிகள் வந்திருக்கிறார்கள்.

**அரசன்** — மந்திரீ ! ஒவ்வொருவராய் சபைக்கு வரட்டும்.

(சங்கீத சாஸ்திரி வந்து வந்தனம் செய்கிறார்.)

**மந்திரி** — அரசே! சங்கீத சாஸ்திரியார் வந்திருக்கின்றார்.

**அரசன்** — ஐயா, சங்கீத சாஸ்திரியாரே ! சங்கீதத்தின் மேன்மைகளைச் சொல்லும்.

**சங்-சாஸ்திரி** — **கலித்துறை**

பாலுண் குழந்தை யொடுநற்
பசுவும் பணியுமின்னும்
ஞாலத் தமர்பண் டிதர்யோ
கியரொடு ஞானியரும்
கோலத் தமரரும் நான்முகன்
முக்கண்ணன் கோவலனும்
சாலச் சுகமுற வோங்கிய
நற்கலை சங்கீதமே.

**அரசன்** — சரி, சந்தோஷம், அங்கு அமரும்.

(வைத்திய சாஸ்திரி வந்து வந்தனம் செய்கிருர்)

மந்திரி — அரசே! வைத்திய சாஸ்திரியார் வந்திருக்கிருர்.

அரசன் — பண்டிதரே! பித்த வாயுவுக்கு கைகண்ட ஒரு முறை சொல்லும்.

வைத்-சாஸ்திரி — **விருத்தம்**

காணுத பித்தவகை வாயு வுக்குக்
 காட்டுகிறேன் சூட்சாதி சூட்ச மொன்று
பூணுக திரிகடுகம் ஓமம் காயம்
 பொடிசெய்து நற்பழத்தைக் கீறி யுள்ளே
பாணுன பொடியதனை மூடி வைத்து
 பனியிலிட்டு அதிகாலை நம்பி யுண்ணு
கோணுமல் நாள்மூன்று கொண்ட பின்பு
 குலேந்தோடும் பித்தத்தால் வந்த வாய்வே.

அரசன் — சரி, நன்றுயிருக்கிறது முறை; அங்கு அமரும்.

(தத்துவ சாஸ்திரி வந்து வந்தனம் செய்கிருர்)

மந்திரி — அரசே! தத்துவ சாஸ்திரியார் வந்திருக்கிருர்.

அரசன் — ஐயா! நீர் யார்?

தத்-சாஸ்திரி — நாம் தத்துவ சாஸ்திரி.

அரசன் — உம்முடைய புலமை எப்படி வெளியாகும்?

தத்-சாஸ்திரி — ஏதேனும் வினவினுல், ஏற்ற விடையை உடனே கூறுவோம்.

அரசன் — அப்படியா! நல்லது, இவ் வுலகம் மனிதன் பொருட்டு ஆனதோ? மனிதன் இவ் வுலகத்தின் பொருட்டு ஆனவனே?

தத்-சாஸ்திரி — யோசித்தால், மனிதன்தான் இவ் வுலகத்தின் பொருட்டு ஆனவன் என்பது ஏற்படும்.

**மந்திரி** — அதெப்படி ? உலகந்தானே மனிதன் பொருட்டானது ?

**தத்-சாஸ்திரி** — அப்படி யல்ல, அந்த விஷயம் சாமானியருக்கும் விளங்கும். உலகம் என்ருல் உயர்ந்தோர் என்று அர்த்தம். அதனுல் உயர்ந்தோனுகிய மனிதன், உலகத்திலுள்ள மற்ற உயிர்களுக்கு உபகாரியா யிருக்கக் கடவன் என்பதே சிறப்பாம்.

**அரசன்** — ஓஹோ, அப்படியா ! சரி, சரி, தத்துவம் நன்ருய் விளங்கிற்று. நீர் அங்கு அமரும்.

(இலக்கண சாஸ்திரி வந்து வந்தனம் செய்கிருர்)

**மந்திரி** — அரசே! இலக்கண சாஸ்திரியார் வந்தார்.

**அரசன்** — ஐயா! இலக்கணப் புலமை விளங்க ஏதேனும் ஒரு கவி சொல்லும்.

**இல-சாஸ்திரி** — வெண்பா

பூநக்கி ஆறுகால் புள்ளினத்துக் கொன்பதுகால்
ஆனைக்குக் கால்பதினை ழானதே - மானேகேள்
முண்டகத்தின் மீது முழுநீலம் பூத்ததுண்டு
கண்டதுண்டு கேட்டதில்லை காண்.

**மந்திரி** — ஆஹா ! இதென்ன ஆச்சரியமா யிருக்கிறதே. அதன் அர்த்த மென்ன ? சொல்லும்.

**இல-சாஸ்திரி** — மானே - பூமானே, கேள் - கேட்பீராக, பூ - புஷ்பத்தை, நக்கி - நக்குகின்ற வண்டுக்கு, ஆறுகால் - ஆறு கால்களாம்.

**அரசன்** — அடடா! அப்படியா அது. பிறகு —

**இல-சாஸ்திரி** — புள் இனத்திற்கு - பட்சி ஜாதிக்கு, ஒன்பது கால் - ஒன்பது கால்கள் (அதாவது) ஒன்பத்-

துக் கால் ($9 \times \frac{1}{4}$) இரண்டே கால். ஆகையால் பட்சிக்கு இரண்டே காலாகும்.

அரசன் — ஒஹோ! இனி ஆனைக்கும் அப்படித்தானோ?

இல-சாஸ்திரி — ஆம் அரசே! ஆனைக்கு - யானைக்கு, கால் பதினேழு - பதினேழு கால்கள், (அதாவது) பதினேழு கால் ($17 \times \frac{1}{4}$) நாலேகால், ஆனது-ஆயிற்று.

அரசன் — இதுவும் சரிதான், பின்பு —

இல-சாஸ்திரி — முண்டகத்தின் மீது - செந்தாமரை மலரின் மீது, முழுநீலம் - பெரிய நீலோற்பல புஷ்பங்கள், பூத்தது உண்டு - பூத்திருப்பது உண்டு, (அதை) கண்ட துண்டு - நேரில் பார்த்த துண்டு, கேட்டதில்லை - சொல்லக் கேட்டது மாத்திரமில்லை, காண்நீர் யோசியும்.

மந்திரி — நேரில் பார்த்த துண்டு, கேட்ட தில்லை என்றால், அதென்ன, அப்படிப்பட்டது?

இல-சாஸ்திரி — தாமரை என்றது முகம். நீலம் என்றது கண். அதாவது, முகமாகிய செந்தாமரை மலரில் கண்ணாகிய நீலத் தாமரைகள் அமைந்திருக்கின்றன என்பதாம். இப்படி அமைந்திருப்பதைக் காண்கின்றோம். ஆனால் அவை அப்படிப் பூத்திருப்பதாக ஒருவர் சொல்லக் கேட்டிருக்கிறோமா ?

அரசன் — இல்லை, இல்லை, சரிதான், வெகு சந்தோஷம், அங்கு அமரும். (ஜோசியர் வந்து வந்தனம் செய்கிறார்)

மந்திரி — அரசே ! ஜோசியர் வந்திருக்கிறார்.

அரசன் — ஐயா ஜோசியரே ! ஒரு ஆரூடம் சொல்லும்.

ஜோசியர் — அரசே! இந்த இலக்கங்களில் ஒன்றைத் தயை செய்து தொடுங்கள். (அரசன் தொடுகிறான்)

## விருத்தம்

மன்னவரே நீர்தொட்ட இலக்கத் தாலே
. மனவருத்தம் நீங்கிப்போம் பொருளும் சேரும்
சொன்ன வெல்லாம் கைகூடும் குடும்ப விருத்தி
சுந்தரரே உண்மையிது சொன்னேன் பாரும்
துன்பமது உம்மைவிட்டு விலகிப் போகும்
தொட்டதொரு குறியினது தூய்மை யாலே
தன்மையுடன் தொடுகுறியின் உண்மை பாரும்
தப்பினுல் சாஸ்திரத்தைச் சுட்டுப் போடே.

அரசன் — ஆஹா! நன்ருய் இருக்கிறது ஜோசியம். ஐயா நீர் அங்கு அமரும். (மந்திரியை நோக்கி இரகசியமாய்) மந்திரி! இவர்களது புலமையை என்ன வென்று மதிக்கின்றீர் ?

மந்திரி — (இரகசியமாய்) அரசே! இவர்க ளெல்லோரும் தங்கள் தங்கள் வித்தையில் நிபுணர்களா யிருக்கிருர்கள் என்பதிற் சற்றும் சந்தேக மில்லை. ஆனுல், இவர்கள் உலக நடை சிறிதும் அறியார்போல் காண்கின்றது.

அரசன் — அதனை எப்படி நீர் அறிந்தீர் ? மந்திரீ !

மந்திரி — அரசே! இந்த சாஸ்திரிகளை நமது அரண்மனைக்கு வெளியிலுள்ள சத்திரத்திற் போய்ச் சமைத்துச் சாப்பிட்டு வரும்படி கட்டளையிட்டால், பின்பு தாங்களே அதைக் கண்டறியலாம்.

அரசன் — சாஸ்திரிகளே! நல்லது, நீங்கள் போய், நமது அரண்மனைக்கு வெளியிலுள்ள சத்திரத்தில் தங்கி, சமைத்துச் சாப்பிட்டு வாருங்கள். (போகிருர்கள்)

[சங்கீத சாஸ்திரி சாதம் சமைக்கவும், வைத்திய சாஸ்திரி பதார்த்தம் வாங்கி வரவும், தருக்க சாஸ்திரி நெய் வாங்கி வரவும், இலக்கண சாஸ்திரி தயிர் வாங்கி வரவும், ஜோதிட சாஸ்திரி இலை பறித்துவரவும் தங்களுக்குள் ஏற்பாடு செய்து-கொண்டு அப்படியே சென்றனர்.]

## இரண்டாங் களம்

இடம் : ராஜ ஸபா மண்டபம்.
காலம் : பிற்பகல்.
பாத்திரங்கள் : அரசன், மந்திரி, இலக்கண சாஸ்திரி, வைத்திய சாஸ்திரி, தத்துவ சாஸ்திரி, சங்கீத சாஸ்திரி, ஜோதிட சாஸ்திரி.

[சாஸ்திரிகள் வந்து அரசனுக்கு வந்-தனஞ் செய்கின்றனர்.]

**மந்திரி** — சாஸ்திரிகளே! நீங்கள் எல்லோரும் போசனஞ் செய்தாயிற்றோ?

**சாஸ்திரிகள்** — ஐயா! தங்கள் தயவினால் பொருள்களெல்-லாம் வேண்டியமட்டும் விலைக்குக் கிடைக்கக்கூடி-யனவாயிருந்தும், போஜனஞ் செய்து சாப்பிட அனுகூலப்படவில்லை.

**அரசன்** — ஏன் அனுகூலப்படவில்லை?

**இல-சாஸ்திரி** — அரசே! நாங்கள் சமைப்பதற்குப் போய், ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொழிலைச் செய்ய ஏற்றுக் கொண்டோம். முடிவில் எல்லாம் சாஸ்-திர விரோதமாய் முடிந்தன. அதனால், ஒன்றும் செய்ய மனமில்லாமல் வந்துவிட்டோம்.

அரசன் — ஓஹோ, அப்படியா சங்கதி! சங்கீத சாஸ்திரியாரே! நீர் என்ன தொழிலை ஏற்றுக்கொண்டீர்?

சங்-சாஸ்திரி — அரசர் பெரும! யான் சாதம் சமைக்க ஏற்றுக்கொண்டேன். சாதம் கொதிக்கையில் தள-பள வென்று சத்தம் உண்டாயிற்று. அது ஒரு தாளத்திலாயினும் சேர்ந்து வரவில்லை. துருவதாளம், மட்டியதாளம், ரூபகதாளம், ஜம்பைதாளம், திரிபுடைதாளம், அடதாளம், ஏகதாளம் என்று தாளங்கள் ஏழு வகைப்படும். அந்த ஏழு தாளங்களில் ஒன்றுக்கும் ஒவ்வாத சப்தத்தை நாம் காதில் கேட்கக்கூடாதாதலால், அதை உதைத்து உருட்டிவிட்டு வெளியே வந்துவிட்டேன்.

அரசன் — ஆஹா! நன்றாயிருக்கிறது. ஐயா, வைத்தியரே! நீர் என்ன செய்தீர்?

வைத்-சாஸ்திரி — அரசே! யான் பதார்த்தம் வாங்கப் போய், ஒவ்வொரு பதார்த்தத்தின் குணங்களையும் நன்கு ஆராய்ந்து பார்த்தேன். அவற்றில்,

1. கத்திரிக்காய் சூடு கடுமையாய்; தின்றக்கால்
தொத்துசொரி சிரங்கைத் தூண்டிவிடும்.

2. வெண்டக்காய் நாளும் விரும்பிப் புசிப்பார்க்கு
வெய்ய கப வாதம் மிகுத்துவிடும்.

3. பெரும் பூசனிக்காய் பித்தமொடு காய்ச்சல்
அருஞ்சார வாயுவும் ஆக்குமே.

4. வாழைக்கா யுண்டார்க்கு வாந்தி மலச்சிக்கல்
வாய்நீர் வயிறுளைதல் வாய்த்திடுமே

என்று சாஸ்திரம் கூறுவதால், ஒன்றும் வாங்காமல் வந்துவிட்டேன்.

**அரசன்** — ஆமாம், அது தான் சரி. தத்துவ சாஸ்திரி-யாரே! உம்முடைய தொழில் யாது?

**தத்-சாஸ்திரி** — அரசே! கடைக்குப் போய் நெய் வாங்கி-வருவது என் தொழில். நான் போய் கடையில் நெய் கேட்டதற்கு, கடைக்காரன் நெய்யை ஒரு தொன்னையில் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்டு வரும் வழியில், தொன்னைக்கு நெய் ஆதரவா? நெய்க்குத் தொன்னை ஆதரவா? என்று ஓர் ஆசங்கை மனத்தில் உண்டாயிற்று. முடிவில் நெய்தான் தொன்னைக்கு ஆதரவாய் இருக்க வேண்டு மென்று தீர்மானித்து, என் ஆசங்கை தீரத் தொன்னையைத் தலை கீழாய்க் கவிழ்த்துப் பார்த்தேன். அந்த நெய் முழுதும் தரையில் ஒழுகிப் போயிற்று. பிறகு, தொன்னைதான் நெய்க்கு ஆதாரமென் றுணர்ந்து, சந்தோஷித்து, வெறுங்கையோடு சத்திரஞ் சேர்ந்தேன்.

**அரசன்** — ஆமாம், ஆசங்கை வந்தால் அப்படித்தான் தீர்த்துக்கொள்ள வேண்டும். தத்துவ சாஸ்திரக் கருத்தும் அதுவே யன்றோ. ஐயா! இலக்கண சாஸ்திரியாரே! உமக்கு ஒன்றும் ஆசங்கை நிகழ வில்லையோ?

**இல-சாஸ்திரி** — அரசே! எனக்கொன்றும் ஆசங்கை நிகழ வில்லை. தயிர் வாங்குவது என் தொழில். நான் தயிர் வாங்கச் சென்றேன். தயிர் விற்பவன் தயி-ரோஓ..........தயிர் என்று கூவினான். ஓகாரம் நெட்டெழுத்து. அதற்கு இரண்டு மாத்திரையே உச்சரிக்கவேண்டும். நெட்டெழுத்துக்கள், புலம்பல், பண்டமாற்று, இசை முதலிய விடங்களில் நீண்டும்

ஒலிக்கும் என்று இலக்கணத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படியாயினும் அது 11 மாத்திரைக்கு மிகுந்து ஒலித்தல் கூடாது என்று வரையறுத் திருக்கிறார்கள். அவன் அதற்கு மேலும் ஒலித்தான். இலக்கண வரம்பு கடந்ததை நாம் காதினால் கேட்கக் கூடாது என்று எண்ணித் திரும்பி வந்து விட்டேன்.

**அரசன்** — ஆமாம், 'அளவு கடந்தால் அமுதமும் விஷம்' என்பர் பெரியோர். அதனால், அளவு கடந்த ஒலியைக் கேட்டு, அமுதத்தை விஷமாகக் கொண்டு திரும்பிவிட்டீர். சரிதான் அது. ஜோசியரே! நீர் என்ன செய்தீர்?

**ஜோசியர்** — அரசே! வேண்டிய இலைகள் சேகரிப்பது எனது தொழில். நான் இலை பறிக்க மரத்தடியிற் சென்று நின்றேன். உடனே கிழக்குப் பக்கத்தில் கெவுளி பளபள வென்று சொல்லிற்று. அதற்கு சாஸ்திரம்,

விருத்தம்

கிழக்கினில் கெவுளி சொன்னால்
கிளைப்பது துக்க மாகும்
பழக்கமே அதன் பயன்றான்
பலித்திடும் ராஜ துக்கம்
வழக்கமே கிழக்கு மூலை
வருமது உறவோர் துக்கம்
விழித்திடத் தலைமேற் சொன்னால்
விஷத்தினால் கெடுதி யாமே

என்று கூறுகிற படியால், மரத்தினின்றும் இலை பறிக்காமலே வந்துவிட்டேன்.

அரசன் — சாஸ்திரிகள்! நீங்கள் பயின்றுள்ள விஷயங்களில் அதிகமும் சாஸ்திரஞான முடையவர்களாகக் காணப்படுகின்றீர்கள். ஆயினும், லோக ஞானம் சிறிதும் உங்களுக்குள் இருப்பதாக ஏற்படவில்லை. லோகஞான மில்லாமல் சாஸ்திரஞானம் மாத்திரம் சிறிதும் பயன்படாது என்பதை நீங்களே அறிவீர்கள். ஆகையால், நீங்கள் இனியாவது உலகத்திற் பழகி, நல்ல அநுபவஞானத்தை யடையவேண்டும் என்பது என்னுடைய வேண்டுகோள். போய்.வாருங்கள். (மந்திரியை நோக்கி) மந்திரீ! இவர்களுக்குத் தக்கவாறு ஏதேனும் பரிசளித்து அனுப்பும்.

மந்திரி — சாஸ்திரிகாள்! வாருங்கள். (போகின்றனர்)



# The Tamil Tongue:

பாஷைநூற் புலவர் பாகவதர் வித்வஜ்ஜந சேகரர் ஆகிய மூவரும் முத்தமிழ்ப் புலவர் வீட்டை யடைகின்றனர். முத்தமிழ்ப் புலவரும் பாகவதரும் தமிழ் தனி மொழியே என்று கூறுகின்றனர். வித்வஜ்ஜந சேகரர் தமிழ் ஸம்ஸ்கிருதத்தினின்றும் வந்ததே என்று வாதிக்கின்றனர். இவர்கள் மூவரும் பாஷைநூற் புலவரை நோக்கி உள்ளதை யுரைத்துத் தம் வழக்கைத் தீர்க்கும்படி வேண்டுகின்றனர். பாஷைநூற் புலவர் முதலில் பாஷைகளின் தோற்றங்களை விளங்கக் கூறி, பின்பு, தக்க ஆதாரங்காட்டித் தமிழ் தனி மொழியே என உறுதி கூறுகின்றனர்.

**AN INTERLUDE**

# தமிழ் மொழி

---

**இடம் :** ஒரு தமிழ்ப் புலவர் வீடு.
**காலம் :** பிற்பகல்.
**பாத்திரங்கள்:** முத்தமிழ்ப்புலவர், வித்வஜ்ஜந சேகரர், பாஷைநூற் புலவர், பாகவதர்.

[பாஷைநூற் புலவர் வருகிறார்.]

**முத்தமிழ்ப்புலவர்** — ஐயா ! வாருங்கள், வாருங்கள்; எங்கே காணோம்? நெடுநாளாயிற்றே உங்களைக் கண்டு.

**பாஷைநூற்புலவர்** — காணுமலென்ன, இங்குதான் இருக்கிறேன். சில நாட்களாக இந்தப்புறம் வரவேண்டிய அலுவல் நேரவில்லை. அதனால், அப்படி இருந்துவிட்டேன்.

**முத்தமிழ்ப்புலவர்** — சரிதான், இன்றாவது இப்படி வந்தீர்களே, போதும். இப்படி வந்து உட்காருங்கள்.

**பாஷைநூற்புலவர்** — இருக்கட்டும், தாங்கள் ஏதோ நூ ராய்ச்சியில் இருப்பதுபோல் காண்கின்றது. ணித்து இடையூறின்றி நடை பெறட்டும். யான் ஓமைதி, இருக்கின்றேன். செய்யுட்

அமையப்
**முத்தமிழ்ப்புலவர்** — என்ன ஆராய்ச்சி, உங்களோ ணிமொழி வது ஆராய்ச்சியல்லவா? "செல்வத்துட் செவிச் செல்வம் அச் செல்வம், செல்வத் [illegible]ரே ! லாந் தலை" என்பது தங்களுக்குத் தெரி[illegible]டரே.

பாஷைநூற்புலவர் — இவ்வளவு சிறப்பு நமக்கு ஏற்குமா? இருக்கட்டும், வாசித்தவர்கள் எதைச் சொன்னாலும் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

(பாகவதர் வருகிறார்.)

முத்தமிழ்ப் புலவர் — ஓ ஹோ! வாருங்கள், ஏது இருவரும் பேசிக்கொண்டு முன் பின்னாக வந்தாற்போல் காண்கின்றது. உட்காருங்கள் இப்படி.

பாகவதர் — அதெல்லாம் ஒன்றும் பேசிக்கொண்டு வரவில்லை. கண்டு, வார்த்தைசொல்லி நாளாயிற்றே என்று எண்ணி இப்படி வந்தது.

(வித்வஜ்ஜந சேகரர் வருகிறார்.)

முத்தமிழ்ப்புலவர் — ஆ ஹா, வாரும், வாரும், வித்வஜ்ஜந சேகரரே; வெகு நாளாயிற்றே உம்மைக் கண்டு. இந்தப் பீடத்தில் அமரும்.

வித்வஜ்ஜந சேகரர் — ஆமாம், லௌகிகம் விசேஷமாயிருப்பதனால் எங்கும் பிரவேசிக்கக் கூடவில்லை. பார்க்கவேண்டும் என்னும் அபேக்ஷயினால்தான் இப்போது வந்தது. ஏதோ காரியமாக இருப்பது போல் காண்கின்றது. நாம் வந்ததும் அதற்கு அசந்தர்ப்பந்தானோ?

ழ்ப்புலவர் — ஆஹா! அப்படியும் சொல்லலாமோ? கற்றோரைக் காண்பதினும் பெரும் பேறு வேறு யாது? உம்மைக் கண்டதனால் உண்டான களிப்பு வ்வளவென்று சொல்லுவதற் கில்லை. வேறு ரிய மென்ன இருக்கிறது. நூலாராய்ச்சிதான் ய்துகொண் டிருக்கின்றேன். அதன்றி நமக்கு று வேலை ஏது?

**வித்வஜ்ஜந சேகரர்** — ஆனுல் சரிதான், அதென்ன சாஸ்திரமோ ?

**முத்தமிழ்ப்புலவர்** — இது "தனித் தமிழ் இயற் பா"

**வித்வஜ்ஜந சேகரர்** — அப்படியா, அதில் ஒரு கவி சொல்லுங்கள், கேட்போம்

**முத்தமிழ்ப்புலவர்** — இப்போதுதான் ஆரம்பிக்கின்றேன்; தமிழ்க் கடவுள் வணக்கஞ் சொல்லிய பின்பு, வேறு சொல்கிறேன்.

**வித்வஜ்ஜந சேகரர்** — ஆஹா, தேவதாப் பிரார்த்தனந் தானே முன்பு செய்ய வேண்டியது. அப்படியே சொல்லுங்கள்.

**முத்தமிழ்ப்புலவர்** —

**தாழிசை**

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்

கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும் த்

ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன் ாரடு
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுஒறந்து

**வித்வஜ்ஜந சேகரர்** — என்ன, என்ன! "ஆரிய . தமிழ் என்பதை மறுபடியும் சொல்லுங்கள். து தனித்து

ண அமைதி,

**முத்தமிழ்ப்புலவர்** — ஆமாம்,

பாடு, செய்யுட்

"ஆரியம்போல் உலகவழக்கு அழிந்து ஒழி மாக அமையப்
சீர் இளமைத் திறம் வியந்து செயல்மற மொழி தனிமொழி
என்று சொன்னேன்.

**வித்வஜ்ஜந சேகரர்** — இதென்ன முத்வஜ்ஜந சேகரரே! இருக்கிறது. முதல், தமிழ் வீணைக வாதிட்டீரே.

ளுக்கே சமம் என்றீர். பிறகு, அது ஆரியத்திலும் சிறந்தது என்றீர். இதென்ன, விபரீத ஞானமாக இருக்கிறதே! இதுவரையில் இந்த பிரஸ்தாபம் எங்கும் கேட்டதே யில்லையே.

முத்தமிழ்ப்புலவர் — நாம் சொல்வதா புரட்டு. நீர் சொல்வதுதான் புரட்டாக இருக்கிறது. தமிழ் தனி மொழி யென்பதை நீர் இதுவரையில் அறியீரா? அது, இன்ன காலத்தில் உண்டான தென்னும் கால வரையறையின்றி, தொன்றுதொட்டு வழங்கி வருவதோர் கடவுள் மொழியாம். வடமொழியும் தென்மொழியும் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள், ஆநந்தத் தாண்டவம் செய்த காலத்தே, அவரது டமருகத்தினின்றும் பிறந்தவை. அவற்றுள், வடபுறத்திற் பிறந்தது வடமொழி. தென்புறத்திற் பிறந்தது தென்மொழி. இவ்விரண்டும் தனி மொழிகளே. அவற்றுள் இந்தத் தமிழின் பெருமையை எடுத்துக் கூற எவரால் ஆகும்!

கலி நிலைத் துறை

ம.

அச்ஞு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
ற‌த்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
ழ்ப்புலவ டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
கற்றோ டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.
பாது? உட

வெவ்வாவெ ார் — ஆஹா! என்ன இது, தமிழில் தனித்
ரிய மென் உண்டோ ?

ய்துகொண் - ஆமாம், தமிழ் மொழி தனி மொழி-
று வேலை எதற்கு மற்றோர் மொழியின் துணையே
லையே.

**வித்வஜ்ஜந சேகரர்** — என்ன விஷயம் நீர் சொல்வது— தமிழுக்குக் காலவரையறை யில்லை என்றீரே அதென்ன? பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டும். வேதங்களே ஈசுவர சொரூப முள்ளவை. அவை, ஈசுவரன் திருவாக்கினின்றும் பிறந்தவை. அவையே அநாதியாகும். அவை யாவும் ஆரிய பாஷையில் இருப்பதனால், ஆரியமே அநாதியாகும். மற்றப் பாஷைகளெல்லாம் பிற்காலத்தி லுண்டாகி, ஆரியத்தின் உதவிபெற்று, வழங்கப்படுவன வாயின. இந்த உண்மையை மறுத்து உரைப்பவர் உம்மைத் தவிர வேறு ஒருவரையுங் காணவில்லையே.

**முத்தமிழ்ப்புலவர்** — ஓஹோ! அப்படியா கருதுகின்றீர் நீர். ஆரியத்தைப் போலவே தமிழ் மொழியும் காலங் கடந்ததுதான்.

**வித்வஜ்ஜந சேகரர்** — இப்போது நீர் சம்பாஷிக்கும் வா..
கிய மெல்லாம் ஸம்ஸ்கிருதமாக இருக்கிற..யத்
தமிழ் ஸம்ஸ்கிருதத்திலிருந்து வந்தது என்..ளாடு
இதைவிட என்ன திருஷ்டாந்தம் வே.. இறந்து
உமக்குப் பாஷை யேது? அக்ஷர மேதும். தமிழ்
ஆரியத்திலிருந்துதானே வரவேண்டு..து தனித்து

**முத்தமிழ்ப்புலவர்** — ஐயா! தமிழ் மெகண அமைதி,
வழங்கி வருவது உமக்குத் தெபாடு, செய்யுட்
மொழியை உயர்வாகக் கூறும்..பமாக அமையப்
தமிழ் மொழிதானே. எமக்..மொழி தனிமொழி
மற் போகின்றது; தமிழ் ..லை.
பார்த்ததும் இல்லையோ வித்வஜ்ஜந சேகரரே!
எமக்கேன்? நாளடைவில்.. வீணாக வாதிட்டீரே.

டிற்கு வந்துவிட்டமையால், வந்தவர்களை அன்புடன் ஏற்றுக் கூடிக்குலவும் பெரியோர்போல், தமிழ் மொழி ஆரியத்தோடு உறவுகொண்டு கலந்தது. நட்புப் பாராட்டாத கயவர்போல, ஆரியம் ஒன்றோடும் கலவாமல் தனித்து நின்று, காலகதியில் வழக்காறற்று அழிந்தது. யோசித்துப் பார்த்தால் உமக்குத்தான் பாஷையில்லை, அக்ஷரமில்லை என்று சொல்லலாம்.

**வித்வஜ்ஜந சேகரர்** — அதென்ன அப்படிச் சொல்கிறீர்?

**முத்தமிழ்ப்புலவர்** — ஐயா! சற்றுக் கவனியும், பாஷைக்கு லக்ஷணம், அதற் குரியவரால் பேசப்பட வேண்டும். ஸம்ஸ்கிருதபாஷை பேசப்படும் வழக்காறற்றிருக்கிறது. அல்லது அந்தப் பாஷைக்கு எழுத்தாயினும் உண்டோ என்றால், அதுவும் இல்லை. ஸம்ஸ்கிருதத்திற்குச் சொந்தமான எழுத்து இல்லாமையால், நாகரம் என்னும் பாஷையின் எழுத்தையே ஸம்ஸ்கிருதத்திற்கு எடுத்து வழங்கிக்-
& கொண்டனர். இதனாலேயே உமக்குப் பாஷையே
பே-இல்லை என்று ஏற்படுகிறதல்லவா?

அசந,
ழ்ப்புலவ...கரர் — ஆஹா! வெகு தூரம் வந்து-
கற்றோரை...ர. 'குப்பை யுயர்ந்தது, கோபுரம் தாழ்ந்-
பாது? உம்...ன்பது இங்கேயே விளங்கி விட்டதே.
வெவ்வாவெ...ர க்ஷரமெல்லாம் ஆரியத்திலிருந்து வந்த-
ரிய மென்...உ..ம. இன்னும் பல அக்ஷரங்கள் உமது
ய்துகொண்...ல்லாமலும் இருக்கின்றன. போகட்-
று வேலை ஏ...ர தளாம்புஜம்'' என்று உம்முடைய
...லகளாலேயே எழுதும் பார்ப்போம்.

முத்தமிழ்ப்புலவர் — எழுத்துக்கள் ஆரியத்தினின்று தமிழுக்கு வந்தனவென்றும், தமிழிலிருந்து ஆரியத்திற்கு வந்தன வென்றும் வாதிப்பது வீணுகும். தனிமொழி ஒவ்வொன்றுக்கும் தனியே எழுத்துக்கள் உண்டு. அவ் வெழுத்துக்களும் அந்தந்தப் பாஷையில் வழங்கும் சொற்களுக் கேற்க அமைவனவாகும். ஒரு பாஷைக்கு வேண்டிய எழுத்துக்கள் மற்ருெரு பாஷைக்கு வேண்டியிரா. ஆகையால், நீர் இப்போது சொல்லிய சொற்ருெடரின் உச்சரிப்பு எமது மொழியில் வேண்டாமையால், எமக்கு அவ் வெழுத்துக்கள் இல்லாதொழிந்தன. அதனுல் இப் பாஷைக்கு இழிவு உண்டாவதில்லை. ஏதோ இப்போது நீர், “வாழைப்பழ வற்றல்” என்பதை உம்முடைய ஆரிய எழுத்திலேயே எழுதும் பார்ப்போம்.

வித்வஜ்ஜந சேகரர் — அதை எம்மால் எழுத ( து,
யாது. அந்த அக்ஷரங்கள் எமது பாஷ -யும்.
இல்லை. அப்படி யில்லாதது ஒன்று இரண் டையத்
தான் இருக்கும். உங்களுக்கு இல்லா களோடு
றுக்கணக்கா யிருக்குமே, இதற்கென் ல் இறந்து
கின்றீர் ? ற்கும். தமிழ்
அது தனித்து

முத்தமிழ்ப்புலவர் — இதற்குத்தாஞ க்கண அமைதி,
ஐயா ! ஒன்றுக்குப் பலவான் எருபாடு, செய்யுட்
டாக்கி பாஷையின் வரிவடிவைப்பமாக அமையப்
தால் பயன் என்ன? ஒரு கக மொழி தனிமொழி
நான்கு ககரங்கள் இருக்கின்றில்லை.
தனித் தமிழுக்குப் பயனி வித்வஜ்ஜந சேகரரே !
மொழி இருபத்தாறு எழுடு வீணுக வாதிட்டீரே.

மொழி இருபத்து நான்கு எழுத்துக்களிலும் இயன்றிருக்கின்றன. இதனால் அப்பாஷைகளுக்கு இழிவோ? எவ்வளவு எழுத்துக்கள் சுருங்குகின்றனவோ அவ்வளவும் சுலபமும் அழகும் அமையும்.

வித்வஜ்ஜந சேகரர் — ஆஹா! நீர் வெகு சாதுரியமாகச் சம்பாஷிக்க அப்பியசித் திருக்கின்றீர். உம்முடைய பாஷையை ரக்ஷித்துக் கொள்வது மன்றி, எம்முடைய பாஷையை ஏளனமும் செய்கிறீரே. இருக்கட்டும், வேத புராண இதிகாசங்கள், மந்திரங்கள் முதலிய எல்லாவற்றிற்கும் உம்முடைய பாஷையில் என்ன உண்டு?

முத்தமிழ்ப்புலவர் — ஐயா! தமிழர்களுடைய கொள்கை, சமய விசாரணை, ஒழுக்கம் முதலிய யாவும் முற்றும் வேறானவை. ஆரிய மொழிக் கலப்பும், ஆரியரோடு நட்பும், தமிழுக்கும் தமிழருக்கும் உண்டான பின்பு, அவை யெல்லாம் மாறுபட்டன. ஆனால், நாம் கொண்டவிஷயம் மதவிஷய மல்ல. தமிழ் தனி மொழியா? அல்லவா? என்பது. [illegible] தனையே இங்கு விளக்கினேன்.

பே[illegible]

அசங்[illegible] ஐயா! அது அவ்வாறன்று. இந்த விஷயத்-
ழ்ப்புலவ[illegible] [illegible]ற்றி எனக்குத் தெரிந்த பிரமாணங்களைச்
கற்றுரை[illegible] [illegible]கிறேன். அதனை எவரேனும் மறுக்க
பாது? உம்[illegible] பாரும். தமிழ் ஒன்றே தனிமொழி.
வெவ்வாறெ[illegible] [illegible]ன்றுதொட்டு வழங்கி வருவது. பரம
ரிய மென்[illegible] [illegible]ப்பெருமான் வழங்குவதும் இத் தமிழ்
ய்துகொண் [illegible] இந்திரன் முதலிய தேவர்களும்
று வேலை எ[illegible] [illegible]ங்குதல் தகாதென்று திருவுளங்
க்காகத் தனியே ஸம்ஸ்கிருதம்

என்னும் வேறொரு பாஷையைச் சிருஷ்டித்துக் கொடுத்தருளினர். அதனால் அவர்களுக்கு வேண்டிய வேத புராண இதிகாச சாஸ்திரங்களையும் அந்தப் பாஷையிலேயே யியற்றி யருளினர். இவை யனைத்தும் அநாதியாய் நமது தமிழ் மொழியில் அமைந்திருக்கின்றன.

**விருத்தம்**

*இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் றன்னை*
*இருநிலம் கால் தீ நீர்விண் பூத மைந்தாய்*
*செந்திறத்த தமிழோசை வடசொல் லாகித்*
*திசைநான்கு மாய்த்திங்கள் நாயி றாகி*
*அந்தரத்தின் தேவர்க்கு அறிய லாகா*
*அந்தணனை அந்தணர்மாட்டு அந்தி வைத்த ...*
*மந்திரத்தை மந்திரத்தில் மறவா தென்றும் ...ால்*
*வாழுதியேல் வாழலாம் மடநெஞ் சம்மே.நந்து,*

என்னும் பிரமாண வாக்கியமும் உண்ட அது, கின்றது. இந்த ஆதரவினால் தமிழ் யடையும். ஸம்ஸ்கிருதத்தைவிட உயர்வான தெ..தியடையத் தியதென்றும் நிலை நாட்டிக் கூறவாஷைகளோடு விட்டு, நீர் ஏன், அது வேறு, இடையில் இறந்து வும் தனிமொழி, இதுவுந் த பெருகும். தமிழ் சமத்துவங்கூறி, ஸம்ஸ்கிரு ல், அது தனித்து யுண்டாக்குகின்றீர்? ஸம்ஸ் இலக்கண அமைதி, முந்தியமொழி யென்று பின் ...பாகுபாடு, செய்யுட் ...செப்பமாக அமையப்

முத்தமிழ்ப்புலவர் — ஆமாம், நீர் செ...ழ் மொழி தனிமொழி பெருமான் தென் மொழி...ல்லை.
யாகவும் இருக்கிறார் என... வித்வஜ்ஜந சேகரரே!
பட்டிருக்கிறது. அதன... ...னுடு வீணுக வாதிட்டீரே.
மானவை யென்பதன்றே

பாகவதர் — அந்தப் பாசுரத்தின் தாத்பரியம் அப்படியானாலும், அதன் சொற் பொருளை ஆராய்ந்தால், சிறப்பு நமது தமிழ் மொழிக்கே ஏற்படுகின்றது. எவ்வாறெனில், கிடக்கை முறையில் நமது தமிழ் மொழி முன்பு கூறப்பட் டிருக்கிறது. அதுவுமன்றி, 'செந்திறத்த' என்னும் அடை மொழியும் நமது தமிழுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால், தமிழ் மொழியே முந்தியதும் சிறப்புடையதும் என்பது ஏற்படுகிறது.

முத்தமிழ்ப்புலவர் — சரி, சரி, இதுவும் சிறப்பே. ஆயினும் நாம் சொல்வது பக்ஷபாதமாகத் தோற்றும். இதோ நமது நண்பர் பாஷைநூற்புலவர் இருக்கின்றார்; அவர் பக்ஷபாத மின்றிப் பல பாஷைகளின் தோற்றங்களையும் ஆராய்ந் தறிந்தவர். அவரே இதனை விளங்கக் கூறட்டும்.

..நூற்புலவர் — நம்மையேன் நடுவில் இழுக்கின்றீர்;
ஆ..கள் எதற்கும் கடவுளைக் கண்டவர்கள். உங்க-
தமிழ்.. உண்ணவும் உடுக்கவும் பேசவும் கற்றுக்
.. தனைக்கக் கடவுளே வருவார். கடவுளின் வாக்கி
டே.. ஒரு பாஷையும், மூக்கிலிருந்து ஒரு
அச.. ஐயா! உடுக்கி லிருந்து ஒரு பாஷையும்
ழ்ப்புலவ.. ..ற்றி வழக்கம். இந்தக் கட்டுக் கதைகளை
கற்றோரை.. ..கிறே.. ..ய மண்டையினின்றும் நீக்க வல்லார்
பாது? உம்.. ..கள்வழி உங்களுக்கு; எங்கள்வழி எங்-
..வ்வளவெ.. ..ண் ..றுக் கொன்று துணைப்பட்டு வராது.
..ரிய மென்.. முடிவு செய்யுங்கள்.
..ய் துகொண்.. ..வாறு சொன்னால் எப்படியாகும்?
று வேலை எத்.. ..ல்லாம் விட்டுத்தானே உங்கள்

வழிக்கு வந்திருக்கின்றோம். இனி, உங்கள் வழி-தான் பலக்கும்போற் காண்கின்றது. இருவர் மாறுபட்ட காலத்தில் அவர்கள் ஐயந் தீரச் சிக்-கறுப்பதன்றோ கற்றோர் கடமை. ஆதலால், தயை செய்து உள்ளதை உள்ளவாறு உரைக்கவேண்டும்.

பாஷைநூற்புலவர் — ஆனால் சரி, எல்லாவற்றிற்கும் ஈசு-வரன்தான் காரணம். ஆயினும், ஒரு பாஷையை உண்டாக்க ஈசுவரன் வேண்டுவதில்லை. அப்படி ஈசுவரனே பாஷையை உண்டாக்கினவரானால், உலகத்தில் இத்தனை பாஷைகளும், இத்தனை மதங்களும், இத்தனை அபிப்பிராய பேதங்களும், பிறவும் ஏற்படவேண்டிய அவசியமில்லை. ஒரே பாஷை, ஒரே மதம், ஒரே அபிப்பிராயமாக அமைந்திருக்கும். ஒரு பாஷை முதலில் கை கால் முதலிய உறுப்புக்களின் சைகையாளவி லிருந்து, நாளடைவில் ஒலி வடிவை யடையும். அது, பல காலம் சென்றபின் வரி வடிவை யடையும். அதற்குப் பின்பே, அப் பாஷை விருத்தியடையத் தொடங்கும். அதனினும் மற்றப் பாஷைகளோடு கலந்து உறவாடாத பாஷை நாளடைவில் இறந்து படும். இதன் விஷயம் விரிக்கிற் பெருகும். தமிழ் மொழியை ஆராயப் புகுந்தால், அது தனித்து இயங்கும் வன்மையோடு, இலக்கண அமைதி, சொற் பாகுபாடு, பொருட் பாகுபாடு, செய்யுட் பாகுபாடு முதலிய யாவும் செப்பமாக அமையப் பெற்றிருத்தலால், அத் தமிழ் மொழி தனிமொழி என்பதில் ஓர் ஐயப்பாடு மில்லை.

முத்தமிழ்ப்புலவர் — கேட்டீரோ, வித்வஜ்ஜந சேகரரே! இவ்வளவு நேரம் என்னோடு வீணுக வாதிட்டீரே.

வித்வஜ்ஜந சேகரர் — சரி, உம்முடைய கட்சிதான் ஜயித்தது. இதுவரையில் தமிழ்ப் பாஷை ஆரியத்திலிருந்து வந்ததென்றே எண்ணியிருந்தேன். நான் மட்டுமா, தமிழ்ப் புலவர்களும் அவ்வாறுதான் எண்ணியிருந்தார்கள், எண்ணிக்கொண்டும் இருக்கிறார்கள். இன்றுதான் இந்த நூதன விஷயம் கேள்விப்பட்டேன். அதுவும் உண்மையாகத்தான் காணப்படுகிறது. அது இருக்கட்டும், ஆரியத்திலிருந்து பல பாஷைகள் உண்டாயிருக்கின்றனவே, அதுபோல், உம்முடைய தமிழ்ப் பாஷையிலிருந்து எந்தப் பாஷையாவது பிறந்ததுண்டா?

முத்தமிழ்ப்புலவர் — ஆஹா! அதற்கென்ன தடை; நான் கடவுள் வணக்கம் சொன்னபோது அதில் வந்ததைக் கவனிக்கவில்லையோ?

வித்வஜ்ஜந சேகரர் — இல்லையே, அதென்ன? சொல்லும்.

முத்தமிழ்ப்புலவர் —

"கன்னடமும் களிதெலுங்கும்
கவின் மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே
யொன்றுபல வாயிடினும்"

என்று வாசித்தேனே.

வித்வஜ்ஜந சேகரர் — அப்படியா, தெலுங்கும் தமிழிலிருந்துதான் பிறந்ததோ? அது ஆரிய சம்பந்தம் பெற்றல்லவோ இருக்கிறது?

முத்தமிழ்ப்புலவர் — ஆமாம், அதன் இலக்கியம் தமிழ்; இலக்கணம் ஆரியம்; அதனால் அவ்வாறு தோ-றுகிறது.

வித்வஜ்ஜந சேகரர் — தெலுங்கு பாஷையின் இலக்கியம் தமிழிலிருந்து வந்ததென்பது எப்படி?

முத்தமிழ்ப்புலவர் — மற்றொன்றும் வேண்டாம், உடலின் உறுப்புக்களையும், எண்களையும் நீர் வரிசையாய்ச் சொல்லிப் பாரும், தெரிகிறது.

| | | | |
|---|---|---|---|
| தலை | — தல | ஒன்று | — ஒகடி |
| மூக்கு | — மூக்கு | இரண்டு | — ரெண்டு |
| கை | — செயி | மூன்று | — மூடு |
| கால் | — காலு | நான்கு | — நால்கு |
| விரல் | — வேலு | ஐந்து | — ஐது |
| பல் | — பல்லு | ஆறு | — ஆறு |
| கண் | — கன்னு | ஏழு | — ஏடு |
| செவி | — செவு | எட்டு | — எனிமிதி |
| உடல் | — ஒடலு | ஒன்பது | — தொம்மிதி |
| | முதலியன. | பத்து | — பதி. |

வித்வஜ்ஜந சேகரர் — சரிதான், இந்தப் பதங்களெல்லாம் தெலுங்கிலிருந்து தமிழில் வந்திருக்கப்படாதோ? தமிழ்ச் சொற்களே என்பதற்கு உமக்கு என்ன ஆதாரம்?

முத்தமிழ்ப்புலவர் — சரி, நீர் கேட்பதும் நியாயந் தான். சொற்கள் ஒரு பாஷையினின்றும் மற்றொரு பாஷைக்குச் சென்ற விஷயம், அவற்றின் சொற் பொருளினால் அறியவேண்டும். இப்பொழுது 'வெண்ணெய்' என்னும் சொல்லை ஆராய்வோம். வெண்ணெய் என்பது தமிழ்ச் சொல். வெண்மை நெய் என்னும் இரண்டு சொற்கள் ஒரு தொடராயின. அதற்கு வெண்மையாகிய பசை என்பது பொருள். இதனைத் தெலுங்கர் 'வேன்ன' என்கின்றனர். அதற்குச் சொற்பொருளின்றி,

மகாமகோபாத்தியாய
டாக்டர். உ. வே. சாமிநாதையர்

இடுகுறியாய் வழங்குகின்றனர். இதனால், தமிழ் மொழியைத் தெலுங்கர் உபயோகித்தனர் என்பது தெளிவாகின்றது. ஐயா! இதுபோலவே, சிறு+எலி=சிற்றெலி என்னும் தமிழ் மொழியை, சிறு+எலுக=சிட்டெலுக என்றும், குறு+உயிர் =குற்றுயிர் என்னுந் தமிழ் மொழியை, குறு+ உசுரு = குட்டுசுரு என்றும் வழங்குகின்றனர். இவ்வாறு மற்றவற்றையும் விரிக்கிற் பெருகும்.

வித்வஜ்ஜந சேகரர் — ஆமாம், விஷயங்கள் சரியாகத்தான் இருக்கின்றன. வீணே வாதிப்பதில் பயனென்ன. தமிழ் தனி மொழியென்றே ஏற்படுகின்றது.

(அனைவரும் போகின்றனர்.)



# The British Empire:



A DIALOGUE

*[Adapted and Translated in Tamil from a leaflet published for the "Empire Day Movement," London.]*

# பிரிடிஷ் ராஜ்யம்

**வினா** — உனக்கும் பிரிடிஷ் ராஜ்யத்திற்கும் உள்ள சம்பந்தம் என்ன ?

**விடை** — நான் பிரிடிஷ் ராஜ்யத்தில் உள்ள குடி ஜனங்களில் ஒருவன்.

**வினா** — இந்திய சக்கிரவர்த்தி யவர்களின் பெயர் என்ன?

**விடை** — மாட்சிமை தங்கிய ஏழாம் எட்வர்ட் சக்கிரவர்த்தி.

**வினா** — பிரிடிஷ் ராஜாங்கம் என்றால் என்ன ?

**விடை** — இந்தப் பூகோளத்தில் ஏழாம் எட்வர்ட் சக்கிரவர்த்தி யவர்கள் ஆட்சிக்கு உட்பட்ட பூபாகம் முழுதும் பிரிடிஷ் ராஜ்யம் எனப்படும்.

**வினா** — பிரிடிஷ் ராஜ்யம் எத்தனை சதுரமைல் பரப்பு உள்ளது ?

**விடை** — பிரிடிஷ் ராஜ்யம் சுமார் ஒரு கோடியே இருபது லட்சம் (1,20,00,000) சதுரமைல் பரப்புள்ளது.

**வினா** — பிரிடிஷ் ராஜ்யத்தின் விஸ்தீர்ணம், பூகோளத்தின் பரப்பில் எவ்வளவு பாகமிருக்கும் ?

**விடை** — சுமார் ஐந்தில் ஒருபாக மிருக்கும்.

**வினா** — பிரிடிஷ் ராஜ்யத்தின் விஸ்தீர்ணத்தை மற்ற ராஜாங்கத்தின் நாடுகளின் விஸ்தீர்ணத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் எவ்வளவிருக்கும் ?

**விடை** — பிரிடிஷ் ராஜ்யத்தின் பரப்பு, மற்ற ராஜாங்க நாடுகளின் விஸ்தீர்ணத்தைவிட அதிகமாயிருக்கும்

வி — ஏழாம் எட்வர்ட் சக்கிரவர்த்தி யவர்களுடைய குடிகளின் ஜனத்தொகை எவ்வளவு ?

விடை — சுமார் நாற்பதுகோடி (40,00,00,000) யாகும்.

வி — ஏழாம் எட்வர்ட் சக்கிரவர்த்தி யவர்களது குடிகளின் தொகை, பூகோளத்தின் ஜனத்தொகையில் எவ்வளவிருக்கும் ?

விடை — சுமார் ஐந்தில் ஒரு பங்கு இருக்கும்.

வி — பிரிடிஷ் ராஜ்யத்தின் ஜனத்தொகையை, ஜனத்தொகையில் மிகுந்த மற்றத் தேசங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் எவ்வாறாகும் ?

விடை — பிரிடிஷ் ராஜ்யத்தின் ஜனத்தொகை சீன ராஜ்யத்தின் ஜனத் தொகைக்குச் சமமாகவும், மற்ற எந்த ராஜ்யத்தின் ஜனத்தொகைக்கும் மிக அதிகமாகவும் இருக்கும்.

வி — பூகோளத்தின் பரப்பு எத்தனை கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது ?

விடை — ஐந்து கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

வி — அவற்றின் பெயர்கள் எவை ?

விடை — ஐரோப்பா, ஆசியா, ஆப்ரிக்கா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா என்பனவாம்.

வி — இவற்றில் எத்தனை கண்டங்களில் பிரிடிஷ் ராஜ்யத்திற்குச் சொந்தமான பாகங்கள் இருக்கின்றன?

விடை — இந்த ஐந்து கண்டங்களிலும் இருக்கின்றன.

வி — இவ் வுலகத்திலுள்ள ஜனங்கள் ஜாதியிலும் நிறத்திலும் பலவகைப்பட்டிருக்கிறார்கள். அவர்களில் முக்கியமாய் வெண்மை, செம்மை, மஞ்சள், கருமை யாகிய நிற முடையவர்க ளுண்டு. இவர்களில்

எத்தனை ஜாதியாரிலும் எத்தனை நிறத்தாரிலும் ஏழாம் எட்வர்ட் சக்கிரவர்த்தியவர்களின் குடிகள் இருக்கின்றனர் ?

விடை — எல்லா ஜாதியாரிலும், எல்லா நிறத்தாரிலும் அவருடைய குடி ஜனங்கள் இருக்கின்றனர்.

வினா — இவ் வுலகிலுள்ள மனிதர் பல வகையான மதஸ்தர்களா யிருக்கின்றனர். இந்து மதம், கிறிஸ்து மதம், மகம்மதிய மதம், புத்த மதம் ஆகிய இவைகளே முக்கிய மதங்கள். இவற்றில் எத்தனை மதஸ்தர்களில் ஏழாம் எட்வர்ட் சக்கிரவர்த்தியவர்களுடைய குடிகள் இருக்கின்றனர் ?

விடை — எல்லா மதஸ்தரிலும் அவருடைய குடிகள் இருக்கின்றனர்.

வினா — உலகத்திலுள்ள வியாபாரக் கப்பலின் தொகையில் பிரிடிஷ் ராஜாங்கத்திற்குச் சொந்தமானது எவ்வளவு ?

விடை — உலகத்திலுள்ள வியாபாரக் கப்பலில் சுமார் பாதியளவு பிரிடிஷ் ராஜாங்கத்திற்குச் சொந்தமானதே.

வினா — பிரிடிஷ் ராஜ்யத்திற்கு வருஷவாரியில் அரசிறை வருமானம் எவ்வளவு ?

விடை — சுமார் (375,00,00,000) முந்நூற்று எழுபத்தைந்து கோடி ரூபாய் வருமானம்.

வினா — பிரிடிஷ் ராஜ்யம் எவ்விதமாய் ஆளுகை செய்யப் படுகிறது ?

விடை — பிரிடிஷ் ராஜ்யத்தின் வெவ்வேறு பிரிவுகள் வெவ்வேறு விதமாய் ஆளுகை செய்யப்படுகின்-

றன. ஐக்கிய நாடுகள், கனடா ராஜ்யம், ஆஸ்திரேலியா குடியேற்ற நாடு, நியூஜீலந்து, கேப் காலனீ, நெட்டால், நியூவவுந்துலாந்து முதலியவற்றைப் போன்ற சில பாகங்கள் சுவராஜ்யம் பெற்று ஆளப்படுகின்றன. இந்தியாவைப்போன்ற மற்ற நாடுகள் சிறிது சுவராஜ்யம் பெற்றும், சிறிது பிரிடிஷ் துரைத்தனத்தாரால் ஏற்படுத்தப்பட்ட உத்தியோகஸ்தராலும் ஆளுகை செய்யப்படுகின்றன. ஆனால், எல்லா நாடுகளும் எட்வர்ட் சக்கிரவர்த்தி யவர்களுக்கு அடங்கியவைகளே.

வினா — பிரிடிஷ் ராஜ்யத்தின் பிரஜைகள், தங்கள் சக்கிரவர்த்தியின் விஷயமாய் நடந்துகொள்ளவேண்டிய கடமைகள் யாவை ?

விடை — சக்கிரவர்த்தியை கவுரவப்படுத்தி அவருக்குக் கீழ்ப்படிந்து நடப்பதே பிரிடிஷ் பிரஜைகளின் கடமையாம்.

வினா — சக்கிரவர்த்தியைக் கவுரவப்படுத்தவும், அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவும் பிரிடிஷ் பிரஜைகள் ஏன் கடமைப்பட் டிருக்கிறார்கள் ?

விடை — ஏழாம் எட்வர்ட் சக்கிரவர்த்தியவர்கள் பிரிடிஷ் ராஜ்யத்தின் ராஜ்யாதிகாரத்தையும், ராஜாங்க கவுரவத்தையும் வகித்தவர். அவர் சட்ட நிபந்தனைக்கு உட்பட்ட சக்கிரவர்த்தியாய், தாம் சட்டத்தை யாதரித்துத் தம் குடிகளை நீதியோடும் பாரபட்ச மில்லாமலும் ஆள்வதாக வாக்களித்திருக்கின்றார். ஆகையால், பிரஜைகள் அவரைக் கவுரவப்படுத்தவும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவும் கடமைப்பட் டிருக்கிறார்கள்.

**வினா — பிரிடிஷ் ராஜ்யத்தின் நாகரிகமடைந்த குடிகளின் கடமைகள் எவை ?**

**விடை** — (1) தங்கள் சக்கிரவர்த்திக்குத் தம்மைப்போல் குடிகளா யிருக்கும் மற்றவர்க ளெல்லாரிடத்தி-லும் விசுவாசமுள்ள சிநேகர்களாய் இருப்பதும்,

(2) அப்படி விசுவாச முள்ளவர்களா யிருப்ப-தோடு, தாம் வசிக்கும் ராஜ்யத்திற்குச் சொல்-லாலும், செய்கையாலும் எந்தக் காலத்திலும் இழிவு விளைக்காதிருப்பதும்,

(3) சாதி, சமயம் முதலிய வேற்றுமைகளைக் கருதாமல் தம்மோடொத்த குடிகளின் க்ஷேமத்-தை விருத்தி செய்வதில் தம்மாலியன்ற வகைகளி லெல்லாம் முயல்வதும் நாகரிக மடைந்த குடிக-ளின் கடமையாம்.

**வினா** — பிரிடிஷ் ராஜ்யத்தின் குடிகள் தம்முடைய ராஜ்யத்திற்கு ஏன் இவ்வகையில் கடமைப்பட்டிருக்க வேண்டும் ?

**விடை**,— பிரிடிஷ் ராஜ்யத்தின் குடிகள் இவ் வுலகத்தி லுள்ள மற்ற ராஜ்யத்தின் குடிகளைவிட மிகவும் அதிகமான உரிமையையும், சுவேச்சையையும், சுதந்தரத்தையும் அனுபவிக்கிறார்கள். ஆதலால் இவ்வகைய வுரிமையையும், சுவேச்சையையும், சுதந்தரத்தையும், அனுபவிப்பதில் தங்களைப் பாதுகாக்கும் ராஜ்யத்திற்கு விசுவாசமும், நன்றி யறிதலும் பாராட்டக் கடமைப்பட்டவர்களாய் இருக்கவேண்டும்.

**வினா — ராஜாங்க தினக்கொண்டாட்டம் என்றால் என்ன?**

**விடை** — பிரிடிஷ் ராஜாங்கத்திற் குட்பட்ட தேசங்களனைத்திலும் தங்களை உத்தமக் குடிகளாக்குவதற்கான குணங்களாகிய ராஜபக்தி, தேசபக்தி, தைரியம், பொறுமை, சட்டத்திற்குக் கீழ்ப்படிதல், அவற்றை மரியாதை செய்தல், அநுஷ்டிப்பவர்களை உற்சாகப்படுத்தல், அரசர் வைத்துள்ள நம்பகத்தைக் கவுரவப்படுத்தல், தங்கள் கடமையில் பிறழாதிருத்தல், இவற்றைப் பிறருக்கு (முக்கியமாய் இளைஞர்களுக்குப்) போதித்தல் ஆகிய இவைகளைப் பின்பற்றவே இந்த ராஜாங்க தினம் கொண்டாடப்படுகிறது.

**வினா** — ராஜாங்க தினக்கொண்டாட்டம் யாரால் விருத்தி செய்யப்படவேண்டும் ?

**விடை** — அது, பிரிடிஷ் ராஜ்யத்தின் பிரஜைகளில் ஒவ்வொருவராலும் விருத்தி செய்யப்பட வேண்டும்.

**வினா** — ராஜாங்க தினம் என்றால் என்ன ?

**விடை** — சக்கிரவர்த்தியின் தேசங்களனைத்திலும் பிரதி வருஷமும் மேமீ 24உ, ராஜாங்கதினக் கொண்டாட்டம் வெளிப்படையாகக் கொண்டு நடத்தப்படுகிறது.

காலஞ்சென்ற விக்டோரியா மகா ராணியாரவர்களது பிறந்த நாள் மேமீ 24உ யாம். அவ்வரசியார் செங்கோல் செலுத்திய 63 வருஷ காலத்தில், பிரிடிஷ் ராஜாங்கம் செழித்தோங்கி அதன் பிரஜைகள் சுகத்திலும், பலத்திலும், தொகையிலும், செல்வத்திலும், சந்தோஷத்திலும் நாளுக்கு நாள் விருத்தி யடைந்து இக்காலத்து நல்ல நிலையை அடைய நேர்ந்தது.

**வி்ஞ** — ராஜாங்க தினக் கொண்டாட்டத்தின் சாராம்சமென்ன?

**விடை** — பொறுப்பு, கடமை, சுயநலம்பாராட்டாமை என்பனவாம்.

**வி்ஞ** — ராஜாங்க தினக் கொண்டாட்டத்தின் கட்டுரை யாது?

**விடை** — ஒரே அரசன், ஒரே கொடி, ஒரே படை, ஒரே ராஜ்யம் என்பதாம்.

**வி்ஞ** — பிரிடிஷ் ராஜ்யத்துக்குரிய கொடியின் பெயர் என்ன?

**விடை** — ஐக்கியக் கொடி (Union jack.)

**வி்ஞ** — ஐக்கியக் கொடி என்று ஏன் பெயர்?

**விடை** — இது, அங்கிலேயர், ஸ்கொத்திலாந்தியர், ஐரிஷ் ஆகிய மூன்று ஜாதியாரின் கொடிகள் ஒன்றுகூடியதாம். அதனால் அதற்கு ஐக்கியக்கொடி என்று பெயர்.

**வி்ஞ** — ராஜாங்க தினக்கொண்டாட்ட நாளாகிய மேமீ 24௳ யன்று ஐக்கியக்கொடியை எந்தெந்த இடங்களில் நாட்டவேண்டும்?

**விடை** — துரைத்தனக் கட்டடங்கள், ஆலயங்கள், திருச்சபைகள், சிகரங்கள், பொதுக் கட்டடங்கள் முதலிய எல்லா விடங்களிலும் ஐக்கியக்கொடியை அவசியம் நாட்டவேண்டும்.



# The Dunces!



AN INTERLUDE

# மூடர்கள் யார் ?

ஓர் அரசன் தன் மந்திரியை நோக்கி, "நம்முடைய ராஜ்-யத்தில் மூடர்கள் யார்?" என்று கேட்டான். "அரசே! உய்த்துணர்ந்தால் தெருப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களைத்தான் மூடர்கள் என்னலாம்" என்முன். அது கேட்ட அரசன் ஆச்சரியமுற்று அதைப் பரீக்ஷிக்க வேண்டும் என்று விரும்பினான். அதன்மேல் மந்திரி, அந்த நகரத்திற்கு அருகிலுள்ள உபாத்தியாயர்கள் அனைவரும் சமுகத்திற்கு வரும்படி உத்தரவு அனுப்பினான்.

அரசன் உத்தரவைக்கண்ட உபாத்தியாயர்கள ஒன்று கூடி பற்பலவாறு யோசித்து, முடிவில் அரசன் சமுகத்தை யடைந்து, ஒருவர்பின் ஒருவராக பயத்துடன் நின்றனர். அப்போது, அவன் முதல் நின்ற உபாத்தியாயரைப் பார்த்து, இப்படி வந்து உட்காருங்கள் என்னும் குறிப்பாய், தன் தலையைப் பின்னுக் கிழுத்து வலது புறமாகத் திருப்பினன். உடனே முதல் நின்றவன் அந்தக் குறிப்பு டகரம் என்று ஊகித்து டஅனு என்முன். தட்சணமே பின்னின்றவர்கள் அனைவரும் டாவென்னு, டியெனு, டீயென்னு என்று டகர வரியை டமாரம் அடித்ததுபோல் திருப்பித் திருப்பிச் சொன்னுர்கள். அரசன் முதலானவர்கள் அதைக்கண்டு வயிறும் புண்பட நகைத்தனர். பிறகு, அரசன் தான் கொண்ட கருத்தை அவ் வுபாத்தியாயர்களுக்குச் சொல்ல, அவர்கள் அதைக் கேட்டு வெட்கமடைந்தனர்.

# மூடர்கள் யார்?

## முதற் களம்

**இடம்:** ராஜ ஸபா மண்டபம்.
**காலம்:** முற் பகல்
**பாத்திரங்கள்:** அரசன், மந்திரி, முதலாயினோர்.

**அரசன்** — மந்திரீ! நமது ராஜ்ய காரியங்க ளெல்லாம் செவ்வனே நடை பெற்றுவருகின்றனவா?

**மந்திரி** — அரசே! யாவும் செவ்வனே நடை பெற்று வருகின்றன.

**அரசன்** — நமது குடிகள் யாதொரு குறையுமின்றி க்ஷேமமாய் இருக்கின்றார்களா?

**மந்திரி** — அரசே! ஈகை, உண்மை, வலிமை, அறிவு முதலிய இன்னவை என்று உணரக் கூடாமல், சற்றும் குறைவின்றி க்ஷேமமாய் இருக்கின்றனர்.

**அரசன்** — மந்திரீ! என்ன அநியாயம்! நமது குடிகள் ஈகை முதலிய நற்குணங்கள் இல்லாமலிருந்தால் நாட்டில் க்ஷேமம் எப்படி இருக்கும்? இதற்கா நாம் அரசு புரிவது!

**கலி நிலைத்துறை**

தாயொக்கும் அன்பில் தவமொக்கும் நலம்பயப்பில்
சேயொக்கும் முன்னின்றொரு செல்கதி யுய்க்குநீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கும் நுணங்குகேள்வி
ஆயப்புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்.

என்றபடி, அரசன் தன் குடிகளுக்கு அன்பினால் தாயாகவும், நன்மைகளைச் செய்வதால் தவமாக-

வும், நல்வழியில் நடத்தி நற்கதியிற் சேர்ப்பித்த-லால் புத்திரனாகவும், நோயை நீக்குவதால் மருந்தாகவும், கல்வி கற்பிப்பதால் அறிவாகவும் இருக்கவேண்டும் என்பது விதியல்லவா? அப்படியிருக்க, நமது குடிகள், ஈகை உண்மை முதலிய நற்குணங்களை அறியாதிருப்பாரானால், நமது செங்கோல், மாட்டை யோட்டும் தாற்றுக் கோலை விடத் தாழ்ந்ததன்றோ? இப்படிப்பட்ட கதி நமது நாட்டிற்கு நேரும் என்று நான் கனவிலும் கருதிய தில்லையே!

மந்திரி — அரசே! தாங்கள் இவ்வாறு மனங்கவல வேண்டாம். நமது குடிகள் நற்குணங்களை அறியவில்லை என்று அடியேன் கூறவில்லை. அவர்கள் அந்த நற்குணங்களை அறியக் கூடாமல் இருக்கிறார்கள் என்றேன்.

அரசன் — சரி, இருக்கட்டும், அறியக் கூடாமல் இருக்கிறார்கள் என்றால், அவர்களுக்கு நன்மை தீமைகளைப் பகுத்தறியுந் தன்மை யில்லை என்பது விளங்குகிறது. அவ்வாறாயினும் அவர்கள் சுத்த மூடர்கள் என்பதுதானே ஏற்படும்.

மந்திரி — அரசே! மன்னிக்கவேண்டும்.

**கலி விருத்தம்**

வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்.

என்றபடி, இரப்போர் ஒருவரும் இல்லாமையால் ஈகை இப்படிப்பட்டதென்றும், பொய்யுரைப்பவர்

ஒருவரும் இல்லாமையால் உண்மை இப்படிப்பட்டதென்றும், பகைவர் ஒருவரும் இல்லாமையால் வலிமை இப்படிப்பட்டதென்றும், மூடர் ஒருவரும் இல்லாமையால் அறிவு இப்படிப்பட்டதென்றும் உணரக்கூடாமல் இருக்கிறார்கள் என்று கூறினேன். மற்றொன்றும் குறைவில்லை யரசே!

**அரசன்** — ஆ, ஆ, ஆ! வெகு நன்று யிருக்கின்றது, அப்படிச் சொல்லும். இதனினும் நாம் பெறவேண்டிய பேறு என்ன இருக்கின்றது. குடிகள் இன்புறக் காண்பதே கொற்றவனுக்கு இன்பமாகும். மந்திரீ! சுருங்கச் சொல்லி விளங்க வைத்தீர். அதை யான் கவனிக்கவில்லை. இருக்கட்டும், நமது நாட்டில் மூடர்களே இல்லையோ?

**மந்திரி** — அரசே! நமது நாட்டில் மூடர்களே இல்லை. ஆனால்........

**அரசன்** — ஆனால், என்ன? சொல்லும் உள்ளதை.

**மந்திரி** — உள்ளதைச் சொல்ல ஒரு தடையும் இல்லை. மஹாராஜா மன்னிக்கவேண்டும்.

**அரசன்** — அதற்கென்ன, உள்ளதைச் சொல்லுவதற்கு மன்னிப்பு ஏன்? நன்றாய்ச் சொல்லும்.

**மந்திரி** — அரசே! உய்த்துணர்ந்தால், உபாத்தியாயர்களைத்தான் மூடர்கள் என்று சொல்லலாம்.

**அரசன்** — என்ன அநியாயம் இது! உபாத்தியாயர்கள் எல்லோருக்கும் அறிவைப் புகட்டுகிறவர்கள் ஆயிற்றே! அவர்களை மூடர்கள் என்றால், அனைவரையுந்தான் மூடர்கள் என்னவேண்டும். மந்திரீ! முன் சொன்னதுபோல் இதிலும் ஏதேனும் உள்ளுறை யுண்டோ?

**மந்திரி** — அரசே! அப்படி ஒன்றுமில்லை; அடியேன் உத்தமமான போதகாசிரியர்களைப்பற்றி யுரைக்கவில்லை. உத்தியோக முறையில் சில பழமொழிகள் வழங்குவதுண்டு. அவை என்னவென்றால்,

| | |
|---|---|
| போகிறிக்குப் | போலிஸ் |
| பொழுது போகாதவனுக்கு | போஸ்டாபீஸ் |
| கையிலுள்ளவனுக்கு | கலெக்டராபீஸ் |
| இருப்புள்ளவனுக்கு | இஞ்சினீராபீஸ் |
| படிப்பில்லாதவனுக்குப் | பட்டாளம் |
| ஒன்றுமில்லாதவனுக்கு | உபாத்திமை |

என்றபடி, எதிலும் வகையின்றித் திரிந்து முடிவில் உபாத்தியாயராகச் சில பேர் ஏற்படுகின்றனர். இதனால் "கழுதை கெட்டால் குட்டிச் சுவரும் — கணக்கன் கெட்டால் வாத்தியாரும்" என்னும் பழமொழியும் வழங்குகின்றது. அப்படிப்பட்ட உபாத்தியாயர்களைத்தான் மூடர்கள் என்று சொன்னேன். மற்றொன்று மில்லை யரசே!

**அரசன்** — மந்திரீ! அப்படியா, இருக்கட்டும், அதை நாம் நேரில் பரீக்ஷிக்க வேண்டும்.

**மந்திரி** — அரசே! இந்தத் தெருப்பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களை யெல்லாம் இங்கு வர வழைத்தால் இதை நேரில் பரீக்ஷிக்கலாம்.

**அரசன்** — அப்படியானால் அவர்களை வரவழையும்.

**மந்திரி**—அரசே! அப்படியே செய்கிறேன் (சேவகனைப் பார்த்து) சேவகா! நீ உன் ஆட்களை அனுப்பி, நமது நகரத்திற்கு அருகிலுள்ள தெருப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களை எல்லாம் நாளை பத்துமணிக்கு சமுகத்துக்கு வரவழை, சீக்கிரம் போ. (போகிறான்.)

## இரண்டாங் களம்

| | |
|---|---|
| **இடம்:** | ஒரு கிராம வீதி. |
| **காலம்:** | காலை. |
| **பாத்திரங்கள்:** | கிராம உபாத்தியாயர்கள். |

(உபாத்தியாயர்கள் கூடுகின்றனர்.)

**அருணகிரிப் பிள்ளை** — என்ன, வேதாசல நாயகரே! உமக்கும் தாகீது வந்திருக்கிறதோ?

**வேதாசல நாயகர்** — ஆமாம், எல்லோரையுந்தான் ஒன்றாய்ப் பிடித்தாற்போ லிருக்கிறது.

**அருணகிரிப் பிள்ளை** — எல்லோரையும் பிடித்த தென்று உமக்கு எப்படித் தெரியும்?

**வேதாசல நாயகர்** — நான்தான் சேவகனைக் கேட்டேனே. சுற்றுப்பட்டில் இருக்கும் உபாத்தியாயர்களுக்கெல்லாம் தாகீது போயிருக்கிறதாம். எல்லாரும் பத்து மணிக்குச் சமுகத்தில் ஆஜரா யிருக்க வேண்டுமாம்.

**அருணகிரிப் பிள்ளை** — அதோ அத்திப்பேடு அப்பாசாமி உடையார் வருகிறார். அவரோடு வீராணத்து வீரைய நாயுடும் வருகிறார்.

**வேதாசல நாயகர்** — பார்த்தீர்களா, நான் சொல்ல வில்லையா, எல்லோரும் போகவேண்டும் என்று.

**அருணகிரிப் பிள்ளை** — சரிதான், அப்படித்தான் இருக்கும். ராஜ சமுகத்தில் ஏதோ விசேஷம் இருப்பது போல் காண்கின்றது.

வேதாசல நாயகர் — அதென்ன, மேல் தெருவு முருகேச முதலியார் வரக்காணோம். அவர் தைரியஸ்தர், எப்படியாவது சமயத்திற்கு ஏற்றதுபோல் பேசி வாய் ஜல்லி யடிப்பார்.

அருணகிரிப் பிள்ளை — எப்படியானாலும் நம்மோடு கலந்து பேசாமல் போவாரா! இரும், அதோ வருபவர் யார் பாரும்.

வேதாசல நாயகர் — அவர்தான், அவர்தான், வரட்டும்.

(எல்லோரும் சேர்கின்றனர்.)

அருணகிரிப் பிள்ளை — எங்கே எல்லோரும் பேசிக்கொண்டு வருகிறீர்கள்; ஏதாவது விசேஷ முண்டோ?

அப்பாசாமி உடையார் — என்ன விசேஷம், உங்களுக்குத் தெரியாத விசேஷம். ஏதோ எல்லோருக்கும் ஆபத்து வந்திருக்கிறதே, இது என்ன சங்கதி? தாங்கள் பெரியவர், தங்களைக் கேட்டால் தெரியும் என்று வந்தேன். வழியில் இவர்களும் வந்து சேர்ந்தார்கள்.

அருணகிரிப் பிள்ளை — எனக்கும் அறுபது வயதாகிறது. இது வரையில் இப்படிப்பட்ட பிரஸ்தாபம் கிடையாது. நீங்களெல்லாம் நல்ல வயதுடையவர்கள். இக்காலத்து விஷயங்களை வெகு நன்றாய் உணர்ந்திருக்கிறீர்கள். நானும் உங்கள் மத்தியில் ஒருவனாக வருகிறேன். அரசன் ஏதாவது கேட்டால் என்னையும் பார்த்துக்கொள்ளுங்கள்.

அப்பாசாமி உடையார் — அண்ணா! நீங்களே அப்படிச் சொல்லி விட்டால், நாங்கள் என்ன செய்வது? எல்லா அனுபவமும் உங்களுக்குத்தான் தெரியும்.

நாங்கள் எல்லாம் ஏதோ காலத்துக்குத் தக்கபடி வேஷம் போட்டவர்கள். நீங்கள்தான் என்ன வந்தாலும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

அருணகிரிப் பிள்ளை — நானென்ன, தொண்டு கிழவன். கிழப்பாட்டு கின்னரிக்கு ஏறுமா? நம்மவர்களில் முருகேச முதலியார் வாக் சாதுர்யமாய் பேசக் கூடியவர். அவரை முன்னே தள்ளலாம்.

முருகேச முதலியார் — ஓஹோ! நம்மை இழுத்து விடா-தீர்கள். நம்முடைய வாக் சாதுர்ய மெல்லாம் பின்னால் தான். "பேச்சுப் பேச்சென்னும் பெரும் பூனை வந்தக்கால் கீச்சுக் கீச்சென்னும் கிளி" என்-பதுதான் நம்முடைய சங்கதி. நான் சொந்த ஊரை விட்டு இந்த ஊரில் வந்திருக்கிறவன். நான் ஏதோ கூத்துப் பாட்டினால் குடும்பை வளர்ப்பவன். பஞ்சகாலமாயிருக்கிறதே என்று பள்ளிக்கூடம் வைத்துக்கொண்டேன். இந்தப் பள்ளிக்கூடந் தான் எனக்கென்ன சதமா! ஏதாவது வேலை யகப்பட்டால் அந்த க்ஷணமே இதை ஒழித்து விட மாட்டேனா, சனியன். இந்தப் பிள்ளைகளைக் கட்டிக்கொண்டு அழ யாரால் முடியும். நான் உங்க-ளோடு வந்தாலும் வந்தேன், இல்லாவிட்டாலும் இல்லை. நம்மைக் கணக்கில் சேர்க்கவேண்டாம்.

வேதாசல நாயகர் — நம்முடைய சங்கதியும் அவ்வளவு-தான். எனக்கு உத்தியோகம் போகாவிட்டால், நான் ஏன் இந்த ஊருக்கு வருகிறேன். இங்கே வந்து சும்மா இருக்கக் கூடாதே, இருக்கிறவரை-யில் ஏதோ இரண்டு பிள்ளைகளை மடக்கிப் போட்டு வைத்தால், வந்த வரைக்கும் வரட்டும், பொடிச்

செலவுக்காவது ஆகாதா என்று ஒரு பள்ளிக்கூடம் வைத்தேன். "கோழி மேய்க்கும் உத்தியோக மானாலும் கும்பினி உத்தியோகம் ஆகுமா!" என்பார்கள். நானும் பத்து இடங்களுக்கு எழுதி உத்தியோகத்திற்கு முயற்சி செய்திருக்கிறேன். ஏதாவது ஒன்று பலிக்காதா. பலித்ததும் பள்ளிக்கூடம் பறக்கவேண்டியதுதான்.

அருணாசலப் பிள்ளை — எல்லாரும் இப்படிச் சொல்லித் தப்பித்துக் கொண்டால், யார்தான் போவது? என்ன, சாம்பசிவப்பிள்ளை! ஒன்றும் சொல்லாமல் மௌனமாய் இருக்கிறீரே?

சாம்பசிவப் பிள்ளை — நானா, எனக்கென்ன இருக்கிறது? எனக்குக் கணக்கு வேலை போகாவிட்டால், நான் ஏன் இந்த இழவுக்கு வருகிறேன். கொஞ்சங் கஷ்டப்பட்டு அந்த க்ஷேத்திர கணிதத்தைப் படித்து முடித்திருந்தால், இந்தப் பாடில்லையே. என்னை ஒன்றும் இழுத்துவிடவேண்டாம். பத்தில் பதினொன்றாய் வந்து கடைசியில் நிற்கிறேன்.

வீரைய நாயுடு — (அருணாசலப் பிள்ளையை நோக்கி) அண்ணா! அதெல்லாம் ஒன்றும் முடியாது. யாரும் முன்னிற்கமாட்டார்கள். தாங்கள் நெடுநாளாய் உபாத்தியாயராக இருக்கிறீர்கள்; வயதிலும் பெரியவர். தாங்கள்தான் முன் நிற்கவேண்டும். "பெரியாரை துணைக்கொள்" என்று வாக்கியமும் இருக்கிறதே.

அருணாசலப் பிள்ளை — அடடா, என்னால் ஆகுமா! இப்போது புதுப் புது முறைகளெல்லாம் பரவியிருக்க பழைய சங்கதிகள் எப்படிப் பிரயோசனப்படும். அதோ வருபவர் யார்? பாரும்.

வீரைய நாயுடு — அவரா (பார்த்து) நமது ராமசாமி ஐயர். அவரோடு கஸ்தூரி ஐயங்காரும், பின்னால் அநந்தாசாரியாரும் வருகிறார்கள். ராமசாமி ஐயரை முதன்மையாக ஏற்படுத்தினால் எல்லாம் சரியாய்விடும். கதைப் புஸ்தகங்கூட எழுதியிருக்கிறார். புதிய முறைகள் அவருக்கு நன்றாய்த் தெரியும்.

[இராமசாமி ஐயர், கஸ்தூரி ஐயங்கார், அநந்தாசாரியார் மூவரும் வருகின்றனர்.]

முருகேச முதலியார் — ஓஹோ, வாருங்கள், வாருங்கள். ஏது உங்களையும் விடவில்லைபோ லிருக்கிறதே. நல்ல வேளைக்கு வந்தீர்கள். (அருணசலப் பிள்ளையைப் பார்த்து) அண்ணா! இவ்வளவு யோசிக்க வேண்டியதில்லை. நமது ராமசாமி ஐயரை முதன்மையாக நியமித்து விடலாம்.

ராமசாமி ஐயர் — பெரியவர் இருக்கச்சே நாமென்ன முதன்மை. பிள்ளையவாளே இருக்கட்டும். அது அப்படியிருக்கட்டும், மஹா ராஜா வரவழைத்த காரணம் இன்னதென்று ஏற்பட்டதோ?

வீரைய நாயுடு — காரணம் என்ன இருக்கிறது. ஏதோ கேட்டு, பரீட்சிக்கத்தான் இருக்கும், மற்றென்ன இருக்கிறது.

கஸ்தூரி ஐயங்கார் — நான் ஒன்று கேள்விப்பட்டேன். அது எவ்வளவு நிஜமோ தெரியாது.

அப்பாசாமி உடையார் — நிஜமோ - பொய்யோ - பத்துப் பேர் நடுவில் வரட்டும். எல்லாம் வெளியாய் விடுகிறது, கேட்டதைச் சொல்லும்.

**கஸ்தூரி ஐயங்கார்** — வேறு ராஜ்யங்களில் உபாத்தியாயர்களுக்கெல்லாம் இப்போது திரவிய சகாயம் செய்ய ஏற்பாடு நடக்கிறதாம். அதுபோல் இங்கேயும் ஏற்பாடு செய்ய உத்தேசம்போ லிருக்கிறது.

**அநந்தாசாரி** — அப்படி நடந்தால் நம்முடைய அதிர்ஷ்டந்தான். மாதமெல்லாம் படிப்புச் சொல்லி, நெல்லையும் கேழ்வரகையும் சோளத்தையும் வாங்கி வயிறு வளர்க்கிற பிழைப்பாவது ஒழியும். மாதமோ வருஷமோ இவ்வளவு வருகிறதென்று ஓர் ஏற்பாடிருந்தால், ஏற்றபடி செய்துகொள்ளலாம்.

**முருகேச முதலியார்** — ஆமாம், ஆமாம், இருக்கும், இருக்கும். ஏணி, தோணி, கிச்சிலிக்காய், உபாத்தியாயர் இந்த நான்கும் ஒன்றல்லவா?

**வீரைய நாயுடு** — அதென்ன, இருந்தாற்போ லிருந்து நடுவில் ஒன்று இழுத்துவிட்டீர். கூத்தில் வருகிற பழமொழியோ இது. அதைச் சற்று விவரமாய்ச் சொல்லும், கேட்போம்.

**முருகேச முதலியார்** — இது தெரியாதா! ஏணி, தோணி, கிச்சிலிக்காய் ஆகிய மூன்று பொருளையும் உபாத்தியாயருக்கு உவமை கூறுவர். ஏனெனில் — ஏணி — தன்னை யடைந்த எல்லோரையும் மேலே ஏற்றும்; ஆனால், தான் மேலே ஏறாது. தோணி — தன்னை யடைந்த எல்லோரையும் கரையிற் சேர்க்கும்; ஆனால், தான் கரையில் சேராது. கிச்சிலிக்காய் — ஊறுகாயை உண்டால் அதற்கு முன் உண்ட பண்டங்களை யெல்லாம் அது ஜீரணிக்கச் செய்யும்; ஆனால், தான் மாத்திரம் ஜீரணியாது. அதுபோல, உபாத்தியாயர் — தன்னை யடுத்த

மாணுக்கர்களை யெல்லாம் வருடந்தோறும் மேல் வகுப்பிற்கு உயர்த்துவார்; தான் உயரமாட்டார். அதாவது, தன்னிடத்தில் படித்த மாணுக்கன் தனக்கு மேலும் வாசித்துப் பெரிய உத்தியோகஸ்தனுக வரவும், தான் மாத்திரம், "பழைய கந்தனே கந்தன்" என்றபடி, எட்டுக்கும் பத்துக்கும் ஏங்கி நிற்பார். அப்படி விருத்தியாகி உயர் பதவியில் இருக்கும் தன் மாணுக்கனைக் கண்டு, "இவனும் என் மாணுக்கன்" என்று சொல்லிக்கொள்ளும் பெருமை யுடையவராக மட்டும் இருப்பார். இதுதான் அதன் கருத்து.

அருணுசலப் பிள்ளை — சரி, சரி, இந்தக் கதையெல்லாம் பிறகு ஆகட்டும், நேரமாகிறது. சமூகத்திற்கு போகப் புறப்படுங்கள்.

அப்பாசாமி உடையார் — அண்ணு! இருங்கள், அதோ ஒரு பெரியவர் வருகிருர். அவரைக் கண்டுகொண்டு போவோம். (பெரியவர் வருகிருர்)

அருணுசலப் பிள்ளை — (கை கூப்பி) சுவாமீ! நமஸ்காரம்.

பெரியவர் — யார் ஐயா ? என்ன விஷயம் ?

அருணுசலப் பிள்ளை — சுவாமீ! நாங்கள் அரசனைக் காணப் போகிறேம். எங்களை ஆசிர்வதிக்கவேண்டும்.

பெரியவர் — ஐயா! அரசர்கள் கண்ணுற் சொல்லி, செவியால் நோக்கும் தன்மை யுடையவர்கள். சாக்கிரதையாக இருந்து, கேட்ட விஷயங்களுக்கு விடை சொல்லவேண்டும். இறைவன் உங்களுக்கு நன்மை புரிவார். போய்வாருங்கள். (போகிருர்கள்.)

## மூன்றாங் களம்

**இடம் :** ராஜ ஸபாமண்டபம்.
**காலம் :** பிற் பகல்.
**பாத்திரங்கள் :** அரசன், மந்திரி, உபாத்தியாயர்கள் முதலாயினார்.

(சேவகன் வந்து நமஸ்கரிக்கின்றான்)

**மந்திரி** — சேவக ! என்ன விசேஷம் ?

**சேவகன்** — ஆண்டவரே ! நேற்று உத்தர வளித்தபடி உபாத்தியாயர்கள் வந்து காத்திருக்கிறார்கள்.

**மந்திரி** — அரசே! கிராம உபாத்தியாயர்கள் வந்திருக்கின்றார்களாம்.

**அரசன்** — நல்லது, மந்திரீ! அவர்களை இப்போது எவ்வாறு பரீட்சிக்கலாம் ?

**மந்திரி** — அரசே ! தாங்கள் ஏதேனும் குறிப்புக் காட்டினால், அதை அவர்கள் உணர்கிறார்களா என்று முதல் பார்ப்போம். பிறகு ஏதேனும் கேட்கலாம்.

**அரசன்** — சரி, அப்படியே செய்வோம் வரவழையும்.

**மந்திரி** — சேவகா ! அவர்களை சமுகத்திற்கு அனுப்பு.

[உபாத்தியாயர்கள் வந்து வந்தனம் புரிகின்றனர். அருணாசலப் பிள்ளை முன்பு நிற்க, மற்றவர்கள் ஒருவர் பின்ஒருவராய் ஒடுங்கி நிற்கிறார்கள்.]

**அரசன்** — (மெதுவாய்) மந்திரீ ! இவர்கள் நிற்பதே மிக வேடிக்கையாய் இருக்கிறது. சுவர் வைத்தது போல் ஒருவர் பின் ஒருவராக நின்றிருக்கிறார்கள். முதல் நின்றவர் முகம் மாத்திரம் நமக்குத் தெரி- [illegible] என்ன இப்படிப்பட்ட பயம்.

மந்திரி — அரசே! இதனாலேயே தெரியலாம் அடியேன் வெளியிட்ட விஷயம். தாங்கள் ஏதேனும் குறிப்புக் காட்டுங்கள்.

[அரசன் தலையைச் சிறிது பின்னுக் கிழுத்து வலதுபுறமாய்த் திருப்புகின்றான். (¬) அருணாசலப் பிள்ளை அரசன் முகத்தை இமைக்காமல் பார்த்து அரசன் காட்டிய குறிப்பு ட என்று எண்ணி உரத்து]

அருணாசலப் பிள்ளை — டஅனா.
அப்பாசாமி உடையார் — டாவன்னா
வேதாசல நாயகர் — டிஇனா
வீரைய நாயுடு — டீயன்னா
முருகேச முதலியார் — டுஉனா
சாம்பசிவப் பிள்ளை — டூவன்னா
ராமசாமி ஐயர் — டெஎனா
கஸ்தூரி ஐயங்கார் — டேயன்னா
அநந்தாசாரி — டையன்னா
மற்றவர்கள் — டொஒனா, டோவன்னா, டௌவன்னா, ட்டன்னா.

[திரும்பித் திரும்பி விரைவாய்ச் சொல்கின்றனர். அரசன் முதலாயினார் நகைக்கின்றனர்.]

மந்திரி — உபாத்தியாயர்களே! போதும், போதும், இனி, நிறுத்துங்கள்.

அரசன் — ஐயா, டஅனா உபாத்தியாயர்களே! நீங்கள் எல்லோருக்கும் நல்வழியைப் போதிக்கிறவர்கள். நீங்கள் இவ்வளவு அறியாமையை மேற்கொண்டு

இருப்பது கூடாது. நாம் இப்போது, இப்படி வந்து உட்காருங்கள் என்று குறிப்புக் காட்டினோம். இதோ உங்களுக்காக பீடங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதை உணராது நீங்கள் டகரவரியை டமாரமாய் அடித்து விட்டீர்கள். நல்லது, இப்போது உங்களுக்காக போதனுப்பியாச கலாசாலை ஒன்று ஏற்படுத்துகின்றோம். அதில் நீங்கள் பழகி உத்தமமான போதகாசிரியர்களாய் வருவீர்களானால், உங்களுக்கு வருடந்தோறும் திரவியோபகாரம் செய்ய ஏற்பாடுகள் செய்வோம், போய் வாருங்கள். (மந்திரியை நோக்கி) மந்திரீ! இவர்களுக்குச் சிறிது பொருளுதவி செய்தனுப்பும்.

மந்திரி — அரசே! அப்படியே செய்கின்றேன்.

உபாத்தியாயர்கள் — மஹாராஜாவே! தங்கள் கட்டளைப் படியே நடந்துகொள்கின்றோம்.

(வணங்கிச் செல்கின்றனர்)



# The Jealous Poet:



AN INTERLUDE

## பொறாமைப் புலவன்:

ஒட்டக்கூத்தரது துர்ப்போதனையால் குலோத்துங்கச் சோழன் புகழேந்தியாரைச் சிறையிட்டான். புகழேந்தியார் சிறையிலிருந்து கொண்டே அங்கு அடைபட்டிருந்த புலவர்களுக் கெல்லாம் நன்ருய் பாடக் கற்பித்தனர்.

நவராத்திரி உற்சவ காலத்தில், ஒட்டக்கூத்தர் சிறையிலிருந்த புலவர்களை வருவித்து, பற்பல விஞக்கள் வினவிஞர். அக் கேள்விகளுக் கெல்லாம் அப் புலவர் ஏற்றவாறு விடை கூறினர். அதனுல், கூத்தர் கர்வபங்கம் அடைந்தனர். இவ் விஷயம் புகழேந்தியாரால் நடந்தது என்று அரண்மனை முழுதும் பரவிற்று.

புகழேந்தியார் சிறையிலிருப்பதை உணர்ந்த அரசி, அரசன் மீது பிணக்குக் கொண்டு, கவாட பந்தநம் செய்தாள். அதுகண்ட அரசன் ஊடல் தணிவிக்கக் கூத்தரை அனுப்பினன். கூத்தர் போய் முயன்று, ஒன்றும் முடியாமல் திரும்பி விட்டார். பிறகு, அரசன் புகழேந்தியாரை வருவித்து அரசியின் ஊடலைத் தணிவிக்க விரும்பிஞன். புகழேந்தியார் அவ்வாறே தணிவித்தனர். அதுகண்டு அரசன் மகிழ்ந்தான்.

ஒட்டக்கூத்தர், தம் விஷயமாய்க் கொண்ட விரோதத்தைத் தீர்த்துக்கொள்ளுமாறு, புகழேந்தியார் ஒரு நாள் அவருடைய வீட்டையடைந்து நடவையில் ஒதுங்கியிருந்தார். அப்போது, கூத்தர் தம் மனைவியிடத்தில் புகழேந்தியின் நற்குணங்களையும் புலமையையும் வியந்து பேசிக்கொண்டிருந்தார். அது கேட்ட புகழேந்தியார் ஓடி, கூத்தரைத் தழுவிக்கொண்டார். உடனே கூத்தரும் புகழேந்தியாருடன் அளவளாவி நட்புப்பாராட்டி ஒன்றுகூடி மகிழ்ந்திருந்தனர்.

# பொருமைப் புலவன்

## முதற் களம்

**இடம் :** சிறைச் சாலை.
**காலம் :** முன் மாலை.
**பாத்திரங்கள் :** குலோத்துங்கச் சோழன், ஒட்டக்கூத்தர், புகழேந்தி.

[குலோத்துங்கச் சோழனும் ஒட்டக்கூத்தரும் உலாப் போகின்றனர். புகழேந்தி சிறைச்சாலையின் மேல்நிலையில் உலவிக்கொண்டிருக்கிருர்.]

**குலோத்துங்கன்** — (ஒட்டக் கூத்தருக்குப் புகழேந்தியைச் சுட்டிக் காட்டி) ஐய! இப் புகழேந்தியார் பெரும் புலவரில் ஓர் அரும் புலவரென்று கேள்விப்படுகின்றேன். அது உண்மையே யன்ரே?

**ஒட்டக்கூத்தர்** — (வெறுப்புடன்) மன்ன! அதென்ன அவ்வாறு நினைக்கின்றனை?

**கலித்துறை**

மானிற்குமோ அந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்குமோ அவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்குமோ அந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தானிற்குமோ அக் கதிரோ னுதயத்தில் தார்மன்னனே.

**புகழேந்தி** — (மன்னனை நோக்கி) அரசர் பெரும! அப்பாடலை ஒட்டிப் பாடவோ? வெட்டிப் பாடவோ?

**குலோத்துங்கன்** — ஒட்டியும் வெட்டியும் பாடும்.

புகழேந்தி — அரசே! கூத்தர் கூறிய பாட்டில் மான முதலியவை இன்னுரென்றும், வேங்கை முதலியவை இன்னுரென்றும் புலப்படவில்லை. ஆகையால், அதனை நாம் புலப்படக் கூறுகின்ருேம்.

### கலித்துறை

*மான் அவன் நானந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த*
*கான் அவன் நானவ் வெரியுந் தழலுங் கனைகடலின்*
*மீன் அவன் நானந்த வெங்கட் சுறவமும் வீசுபனி*
*தான் அவன் நானக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே.*

குலோத்துங்கன் — (கூத்தரை நோக்கி) ஐயா! கேட்டீர்களோ இப் பாடலின் அமைப்பை?

ஒட்டக்கூத்தர் — (மெல்ல) மன்ன! இதற்கு யாம் மாறு கூறப்புகுதல் எமது கல்விப் பெருக்கிற்கு ஏற்றதன்று. அன்றி, வீண்வாதத்தில் காலம் கழியும். ஆதலின், நாம் இதனைப் பாராட்டாமல் செல்லுவோம். (செல்கின்றனர்)



## இரண்டாங் களம்

**இடம் :** குலோத்துங்கன் அத்தாணி மண்டபம்.
**காலம் :** காலை.
**பாத்திரங்கள் :** குலோத் துங்கன், ஒட்டக் கூத்தர், சேவகன் முதலாயினோர்.

**ஒட்டக்கூத்தர்** — மன்ன ! நவராத்திரி யுற்சவ காலம் நெருங்கிவிட்டது. இனி, சிறைக் கோட்டத்தி லுள்ள புலவர்களை அழைத்து, அவர்தம் கல்வித் திறத்தைப் பரீட்சித்து, தோற்றவர் தலைகளை வாணிக்குப் பலியாகச் சேதிக்கவேண்டு மன்றோ?

**குலோத்துங்கன்** — ஆமாம், அது வழக்கந்தானே. சேவகனை ஏவி, சிறைக் கோட்டத்தி லுள்ள புலவர்களை அழைத்துவரச் செய்யலாமே.

**ஒட்டக்கூத்தர்** — சேவக! நீ விரைந்து சென்று, சிறைச் சாலையிலுள்ள புலவர்களை அழைத்து வருவாய்.

**சேவகன்** — சுவாமீ ! ஒரு நாள் தாங்கள் கீழே யிருந்து பாடியபோது, தங்களுக்கு மேலே இருந்து எதிர் பாட்டுப் பாடினாரே, அவரையுந்தானே அழைத்து வரவேண்டும்.

**ஒட்டக்கூத்தர்** — அடே, தலையெல்லாம் பேசாதே. அவர் இருக்கட்டும். மற்றவர்களை அழைத்து வா.

**சேவகன்** — சுவாமீ ! அப்படியே செய்கிறேன் (வாயோடு) அவரென்றால் ஐயாவுக்கு அஸ்தியில் சுரம்போ லிருக்கிறது. (செல்கிறான்)

## மூன்றாங் களம்

இடம் : அரண்மனையில் சரஸ்வதீ பீடம்.
காலம். பிற்பகல்.
பாத்திரங்கள் : குலோத்துங்கன், ஒட்டக் கூத்தர், சிறைக் கோட்டத்திலிருந்த புலவர்.

[புலவர்கள் வந்து அரசனையும் கூத்தரை-யும் வணங்குகின்றனர். இருவரும் தலை யசைக்கின்றனர்.]

ஒட்டக்கூத்தர் — புலவர்காள்! யாம் இப்போது உங்க-ளுக்குள்ள கல்வி யறிவைப் பரீட்சிக்குமாறு சில விஷயங்கள் வினவுகின்றோம். அவற்றிற்குத் தக்க-வாறு விடை யளித்தால், பட்டமும் பரிசிலும் பெறலாம். இன்றேல், உங்கள் சிரங்களை இணை யிணையாக முடியிட்டு, இறங்க வைத்து, இக் கலைவாணிக்குப் பலி யிடுவோம். துணிவுள்ளார் முன்னே வரலாம்.

(அதுகேட்டுக் குயவனாகிய புலவன் மிடுக்குடன் முன்வந்து)

புலவன் — புலவர் பெரும! தங்கள் வினாவுக்கு விடை யளிக்க அடியேன் முன் நிற்கின்றேன்.

ஒட்டக்கூத்தர் — அப்படியா? நல்லது,

### கலி விருத்தம்

மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ ரடா

குயவன் — (உடனே மிடுக்காய்) ஐய!

கூனை யுங்குட முங்குண்டு சட்டியும்
பானை யும்பண்ணு மங்குசப் பையடல்யான்.

விதூஷகன் — பேஷ்! கூத்தர் தம்மை யானை என்றதும், குயவனார் தம்மை அங் குசப் பையல் என்றதும் மிகப் பொருத்தமாய் இருக்கின்றன. ஆனையை அடக்குவதும் அங்குசந்தானே.

ஒட்டக்கூத்தர்—(தலையசைத்து) நல்லது, நீர் அங்கிரும். மற்- றொருவர் வரட்டும். (அம்பட்டனாகிய புலவன் வந்து)

அம்பட்டன் — புலவர் பெரும! அடியேன் வந்தனம்.

ஒட்டக்கூத்தர் — ஆஹா!

கலித்துறை

விண்பட்ட கொக்குவல் லூறுகண் டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின் றய்பொட்டை யாய்புகல் [வாய்

அம்பட்டன் — ஐய!

கண்பொட்டை யாயினு மம்பட்ட னன்கவி வாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவெனே.

விதூஷகன் — ஆமாம், கூழுக்கு மாங்காய் தோற்றுவிடுமா?

ஒட்டக்கூத்தர் — சரி, அப்படி அகன்றிரு. பிறகு யார் வருபவர்? (கொல்லனாகிய புலவன் வந்து)

கொல்லன் — புலவரேறே! இதோ அடியேன் வந்தேன்.

ஒட்டக்கூத்தர் — நீ யார்?

விதூஷகன் — (மெதுவாக) முன் இரண்டு பேருக்கும் பாடல் பாடி, கன்னத்தில் அறைந்தாற்போல் பதில் வரவே, கூத்தர் இப்போது வசனத்தில் வந்துவிட்டாரே!

கொல்லன் — ஐய்! யான்,

கலித்துறை

செல்வன் புதல்வன் றிருவேங் கடவன் செகத்குருவாம்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே.

**விதூஷகன்** — ஆமாம், கொல்லனைப் பகைத்தால் கொல்லமாட்டானா? கொல்லத் தெருவில் ஊசி விற்பாருமுண்டா?

**ஒட்டக்கூத்தர்** — (மிகக் கோபத்துடன்) ஆஹா, அப்படியா? நல்லது, நீ கொல்லனா! இருக்கட்டும், இன்னும் எவரேனும் உண்டோ?

(வேளாளனாகிய புலவன் வந்து)

**வேளாளன்** — அடியேன் ஒருவன் இருக்கின்றேன்.

**ஒட்டக்கூத்தர்** — நல்லது, கவிச் சக்கிரவர்த்தி யாகிய நமக்கு முன் அற்ப வித்வான்கள் வரலாமோ?

**வேளாளன்** — புலவர் பெரும!

**கலித்துறை**

கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் தோகனதப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்னன் கவியொட்டக் கூத்தநின் கட்டுரையா
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ் பாடிய பாவலரே. [ம்

**விதூஷகன்** — பேஷ், மரத்துக்கும் படாமல் மாங்காய்க்கும் படாமல் கல்லெறிவதுபோல் விடை சொன்னாரே. வெள்ளாழர் உள்ளாழ ரல்லவா?

**ஒட்டக்கூத்தர்** — (வெட்கி) மன்ன! இவர்க ளெல்லோரும் சிறிது பாடப் பயிற்சி யுடையவராகக் காண்கின்றனர். இவர்கட்கு ஏதேனும் பரிசளித்து சிறையை விடுதலை செய்யலாம்.

**குலோத்துங்கன்** — மந்திரீ! இவர்களுக்கு ஏற்ற பரிசில் அளித்து அனுப்பிவிடும். (எல்லோரும் செல்கின்றனர்)



## நான்காங் களம்

**இடம் :** அரண்மனையின் அந்தப்புரம்.
**காலம் :** முன் மாலை.
**பாத்திரங்கள் :** குலோத்துங்கன், ஒட்டக்கூத்தன், புகழேந்தி, குலசேகரி, கல்யாணி (பாங்கி)

(கல்யாணி விரைந்து ஓடி வருகின்றாள்.)

குலசேகரி — அடீ கல்யாணீ! இவ்வளவு சந்தோஷத்துடன் ஓடி வருகிறாயே, என்ன விசேஷம்?

கல்யாணி — அம்மா! ஸம்ஸ்தானத்தில் என்றும் நடவாத விஷயம் இன்று நடந்தது. அதனால், அப்படி ஓடி வந்தேன்.

குலசேகரி — அதென்ன அப்படிப்பட்ட விசேஷம்?

கல்யாணி — அம்மா! அதை என்னவென்று சொல்வது. புகழேந்திப் புலவரால் ஒட்டக்கூத்தர் கர்வ பங்கம் அடைந்தனராம். இதுதான் விசேஷம்.

குலசேகரி — புகழேந்தியாரால் ஒட்டக்கூத்தர் ஏன் கர்வ பங்கம் அடைகிறார்? சற்று விவரமாய்ச் சொல்லு.

கல்யாணி — புகழேந்தியார் சிறையிலிருக்கிறா ரல்லவோ?

குலசேகரி — என்ன, என்ன! புகழேந்தியார் சிறையிலிருக்கிறாரா! என்ன விபரீதமாய் இருக்கிறது! நடந்ததை உள்ளபடி சொல்லு.

கல்யாணி — புகழேந்தியார் சிறையிலிருப்பது உங்களுக்குத் தெரியாதா! அவர் இன்று நேற்றாகவா சிறையிலிருக்கிறார்! அவர் இங்கு வந்த நாள் முதலாகத்தான் சிறையிலிருக்கிறார்.

குலசேகரி — அடி கல்யாணி! இதைக் கேட்க என் மனம் பதைக்கின்றது. என் அரிய ஆசிரியர் அவ்வாறு என்ன குற்றம் செய்தார்? இதுவரையில் இதனை நீ ஏன் எனக்குத் தெரிவிக்க வில்லை? ஐயோ, என்ன பாடு படுகிறாரோ! கல்யாணி! நடந்த விஷயத்தைச் சீக்கிரம் சொல்லு.

கல்யாணி — அம்மணீ! இவ்விஷயம் தங்களுக்குத் தெரிந்திருக்கு மென்றே எண்ணி யிருந்தேன். மஹாராஜா செய்தது தங்களுக்குத் தெரியாதிருக்குமா?

குலசேகரி — எனக்கு உள்ளபடி சிறிதும் தெரியாது. என் மனம் பதறுகின்றது. என்ன நடந்தது சற்றும் ஒளியாமல் சொல்லு.

கல்யாணி — புகழேந்தியார் தங்களோடு இங்கு வந்தவுடனே, அவர், தங்கள் தந்தையார் சமுகத்தில் நமது மஹாராஜாவை இழிவுபடுத்திக் கூறியதாய் ஒட்டக்கூத்தர் சொல்லினர். அதனால், அரசர் புகழேந்தியார் மீது கடுங்கோபங்கொண்டு, அவரைச் சிறையி லிட்டனர்.

குலசேகரி — ஐயோ, என்ன அநியாயம்! அவர் ஒன்றும் அவ்வாறு இழிவுபடக் கூறவில்லையே. ஒட்டக்கூத்தர் தம் அரசரை உயர்த்திக் கூறினார். பிறகு, புகழேந்தியார் தம் அரசரை உயர்த்திக் கூறினார். மற்றொன்றும் நிகழவில்லையே. அரசர் இவற்றை யெல்லாம் கேட்டறியாமலா இப்படிச் செய்து விட்டார்! இருக்கட்டும், பிறகு என்ன நடந்தது?

கல்யாணி — அம்ம! புலவர்களைச் சிறையில் வைப்பது இங்கே புதிதல்ல. வருடந்தோறும் மன்னரிடம் பரிசு பெற வரும் புலவர்களை ஒட்டக்கூத்தர்

சிறையில் அடைப்பித்து, நவராத்திரி உற்சவ காலத்தில் அவர்களை வருவித்து, பல கேள்விகள் கேட்பர். விடை சொன்னவர்கள் பரிசு பெற்றுப் போவார்கள். சொல்லாதவர்களை, இரண் டிரண்டு பேராகக் குடுமிகளை ஒன்றோடொன்று முடியிட்டு இணைத்து, கலைவாணியின் முன் இறங்க வைத்து, பிடாரிக்கு இரட்டைக்கடா பலிகொடுப்பதுபோல், சற்றும் இரக்க மின்றி அவர்களுடைய சிரங்களை வெட்டுவது வழக்கம்.

குலசேகரி — ஐயையோ! வித்துவான்களையா வெட்டுவது! என்ன கொடுமை! இந்த வருடமும் அவ்வாறு நடந்ததோ ?

கல்யாணி — அம்மா! புகழேந்திப் புலவரது புண்ணியத்-தினால், இந்த வருடம் அவ்விதமான கொலைப் பாதகம் நடவாமல் ஒழிந்தது. புகழேந்தியாரை எல்லோரும் வாயார வாழ்த்துகின்றனர்.

குலசேகரி — ஐயோ ! அம் மகானுபாவர்தாம் சிறையிலி-ருக்கின்றாரே, அவரென்ன புண்ணியம் செய்தார்? அடி கல்யாணி! என்னிடம் வஞ்சப் புகழ்ச்சியாகவா பேசுகின்றனை ?

கல்யாணி — அம்மணி! தங்களிடம் அப்படிப் பேசுவேனா. உள்ளவாறே உரைத்தேன். சிறையி லகப்பட்ட வித்துவான்களுக் கெல்லாம் புகழேந்தியார் நன்கு கல்வி கற்பித்து, பாடவும் பயிற்றினாராம். அத-னால், அவர்களை ஒட்டக்கூத்தர் அழைப்பித்து, பற்பல கேள்விகள் கேட்டபோது, ஒவ்வொருவ-ரும் சற்றும் முன் பின் யோசியாமல், கேட்டவர் கன்னத்தில் அறைந்ததுபோல் விடை கூறினர்.

அதனால், கூத்தர் வெட்கமடைந்து, அப் புலவர்களுக்கு ஏற்றவாறு பரிசு அளிக்கும்படி மன்னவர்க்குச் சொல்லினர். புலவர்கள் தலை தப்பியதன்றித் தக்க பரிசிலும் பெற்ற மகிழ் சியால் புகழேந்தியாரை வாழ்த்தி வணங்கச் சிறைச்சாலைக்குச் சென்றனர். அதைக்கண்டு பெரு மகிழ்வுடன் ஓடி வந்தேன். மற்று யாதும் வஞ்சப் புகழ்ச்சியில்லை, அம்மணீ !

குலசேகரி — அடி, கல்யாணி! கண்டனையோ பெரியோர் செய்கையை.

**வெண்பா**

*தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்*
*வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர் — திங்கள்*
*கறையிருளை நீக்கக் கருதா துலகில்*
*நிறையிருளை நீக்குமேல் நின்று.*

என்றபடி, பெரியோர் எங்கே இருந்தாலும், எந்த நிலையில் இருந்தாலும் தம்மாலான நன்மையைப் பிறர்க்குச் செய்வதிலே கருத்துடையர்ாக இருப்பரென்பது இதனால் நன்கு விளங்குகின்றதல்லவா? இப்படிப்பட்ட மகானுபாவரைச் சிறையி விட எவர்க்குத்தான் மனம் வரும். இவ் விஷயங்களைத் தாமே கண்ட பிறகும், மன்னருக்கு அப் புலவரிடத்தில் மனம் இரங்க வில்லையா ?

கல்யாணி — அம்மணீ ! அவர் விஷயமாய் இரக்க மென்பது மன்னர்க்கு வாயிலும் காணோம், முகத்திலும் காணோம்.

குலசேகரி — காணாது, காணாது, மனத்தில் இருந்தால் அல்லவா வாயில் வரும், முகத்திலும் தோன்றும்.

"கோட் செவிக் குறளை காற்றுடன் நெருப்பு" என்னும் நீதிமொழி பொய்க்குமா? இருக்கட்டும், இக்கதவை மூடித் தாளிடு. எவரெவரினும் இதைத் திறக்க வேண்டாம்.

**கல்யாணி** — அப்படியே செய்கின்றேன், அம்மணீ!

(மூடித் தாளிடுகின்ருள். சோழன் வந்து)

**குலோத்துங்கன்** — (கதவைத்தட்டி) யாரங்கே? யாரங்கே?

**கல்யாணி** — அரசே! யார் வந்தாலும் கதவைத் திறக்க வேண்டாமென்று அரசியார் உத்தரவளித்திருக்கிருர்.

**குலோத்துங்கன்** — யான் வந்தாலுமா ?

**கல்யாணி** — யார் வந்தாலும் கூடாதாம். அரசியார் ஏதோ சிறிது கோபத்துடன் இருப்பதாகக் காண்கின்றது, அரசே!

**குலோத்துங்கன்** —(திரும்பிச்சென்று கூத்தரை நோக்கி) புலவர் பெரும! அரசிக்கு ஏதோ சிறிது பிணக்கு நேர்ந்திருப்பதாகக் காண்கின்றது. அதனைத் தணிவிக்கத் தயை செய்யவேண்டும்.

**ஒட்டக்கூத்தர்** — நல்லது அப்படியே செய்வோம்.

(கூத்தர் அந்தப்புரம் வந்து)

**கலித்துறை**

நானே யினியுன்னை வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடு வாய் திற வாவிடிலோ
வானே றனைய இரவிகு லாதிபன் வாசல்வந்தால்
தானே திறக்குநின் கைத் தலமாகிய தாமரையே.

**விதூஷகன்** — பேஷ்! சோழுரைச் சூரியனுகவும், அரசியார் கையைத் தாமரை மலராகவும் உருவகஞ் செய்து, சூரியன் வந்தால் தாமரை தானே திறக்கும் என்று வர்ணித்துப் பாடியது மிகவும் சிறப்பாகத்தான்

இருக்கிறது. ஆனால், சொல் நடை கடினமாகக் காண்கின்றது. "வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்" என்பதை இவர் அறியாரோ! கூத்தர் சங்கதி கூத்தாகவே இருக்கிறதே.

குலசேகரி — அடி கல்யாணி! ஒட்டக்கூத்தர் பாட்டுக்கு இரட்டைத் தாள் போடு. (மற்றொரு தாளிடுகிறாள்)

ஒட்டக்கூத்தர் — (அரசனிடம்வந்து) மன்ன! அது விரைவில் தணியும் கோபமாகக் காணவில்லை. நாம் போகவே ஒரு தாளுக்கு இரண்டு தாளாக ஏற்பட்டுவிட்டன.

குலோத்துங்கன் — இதென்ன! குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்ட கதையாக இருக்கிறது. நாம் என்ன செய்தோம்; ஒன்றும் தோன்றவில்லையே! தெரிந்தாலும் தக்க பரிகாரம் தேடலாம்.

ஒட்டக்கூத்தர் — ஆம், எமக்கும் ஒன்றும் புலப்படவில்லை.

விதூஷகன் — உங்களுக்கெல்லாம் புலப்படாது, எனக்குப் புலப்படும். புரவலர்க்கும் புலவர்க்கும் புலப்படுமா புகழேந்தியார் விஷயம்!

குலோத்துங்கன் — ஆஹா! சரி, சரி! புகழேந்தியாரை நெடுங் காலமாகச் சிறை வைத்திருக்கின்றோமே, அதுதான் காரணமாக இருக்கலாம். அவரையும் இங்கு வருவித்துப் பார்ப்போம், அப்போதாவது பிணக்குத் தீர்கிறதா. (திரும்பி) சேவக! நீ விரைந்து சென்று, என் வந்தனம் சொல்லி, புகழேந்தியாரையழைத்து வருவாய். (ஓடுகிறான்)

ஒட்டக்கூத்தர் — மன்ன! அப்புகழேந்தி வந்து செய்யக் கூடியது என்ன இருக்கின்றது? எம்முடைய பாடலால் நீங்காத பிணக்கு, மற்று யாருடைய பாடலால் நீங்கும்?

**குலோத்துங்கன்** — புலவர் பெரும! தாங்கள் கூறுவது உண்மையே. ஆயினும், புகழேந்தியார் அரசிக்குப் போதகாசிரியர். ஆதலால், அவர் உரையில் சற்று சாந்தம் ஏற்படும் என்று நம்புகிறேன்.

**ஒட்டக்கூத்தர்** — ஆனால் சரி, அப்படியே ஆகட்டும்.

(புகழேந்தி வந்து)

**புகழேந்தி** — மன்னர் மன்ன! வந்தனம் புரிகின்றேன்.

**குலோத்துங்கன்** — ஆஹா! வந்தனம், வாருங்கள், அருகில் வரவேண்டும். (வருகிறார்) இன்று அரசிக்கு ஏதோ பிணக்கு உண்டாயிருக்கிறது. அது தங்களைப் பற்றியதாக இருக்கலாம் என்று எண்ணுகின்றேன். அது தீரும்படி தயை செய்யவேண்டும்.

**புகழேந்தி** — அரசர் பெரும! எங்கள் அரசியார் நற்குணங்களுக்கு ஒரு நாயகியாக விளங்குபவர். காரணமின்றிப் பிணக்கு உண்டாவது அரிது. அதுவும் கணவரிடத்து நிகழ்வது மிகவும் அரிது. யாதாயிருப்பினும் பார்ப்போம்.

**கலித்துறை** [பொற்

இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்திய
குழையொன் றிரண்டு விழியணங் கேகொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகைம் மாறு பரணனின் வாசல்வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே.

**குலசேகரி** — ஆஹா! என்ன இனிமை! என்ன நயம்! இத்தகைய பாடலைக் கேட்டு எத்தனை நாட்களாயின! அடி கல்யாணி! உடனே கதவைத் திற. (புகழேந்தியை நோக்கி) புலவர்பெரும! தங்களுக்கு நேர்ந்த இடுக்கண்களை இதுகாறும் அறியேன். அதனால் மனங்கொண்டு மன்னிக்க வேண்டும்.

புகழேந்தி — அகவல்

அம்மணீ வருந்தேல் அறைகுவேன் கேளாய்
இம்மா நிலத்தில் இயற்கையாம் இதுவே
மன்னிய நிகத்தில் வளர்கொடி யெல்லாம்
தன்னயல் இருக்கும் தருக்களைப் பற்றி
ஏறும் இயற்கை எங்கணும் உளதால்
கூறும் அந்தக் கொடிகள் தாமும்
இம்மரம் முள்ளுறை இயைந்த தெனவும்
அம்மரம் கோழுறை அமைந்த தெனவும்
கண்டு கொள்ளும் கருத்தின அலவே
அண்டிய அம்மரம் அடர்முள் ளுளதாய்
இருப்பின் அதன்மே லேறிய கொடியின்
உருக்கொள் இலையும் உயரிய பூவும்
காற்றினா லசைந்து கண்டகத் துற்று
கீற்றுறக் கிழிந்து கேடடை யும்மே
அன்றி அம்முள்ளே யசைந்திலை பூமேல்
ஒன்றினும் நாச முறுமிவற் றிற்கே
அதுபோல்,
மாநிலம் புரக்கும் மன்னவர் தாமும்
ஆனசெல் வத்தா லான்றபு மான்களும்
தந்நிழல் போலத் தாழா தோடி
பன்னிய இச்சகம் பாடிப் பாடி
நட்புடை யார்போல் நாளுங் கூடி
பெட்புடன் பொருளைப் பெற்றிடும் வஞ்சக்
கருத்துள மாந்தர்தம் கைவசப் பட்டே
வருத்தும் அவர்சொல் வழிநடந் திடுவார்
குற்றங் கூறினும் குணமாக் கொள்ளுவர்
மற்றெவர் சொல்லையும் மதித்திடா ரந்தோ
இதனால் விளையும் இன்னலுக் களவு
மதிக்கவும் படுமோ மங்கையர்க் கரசே!

**விதூஷகன்** — ஆமாம், ஆமாம், இதற்குத் திருஷ்டாந்தந் தேட வெகுதூரமும் போக வேண்டுமோ, நமது மன்னவரே போதாதா.

**குலோத்துங்கன்** — (விதூஷகனை உறுத்துப் பார்த்து) அமைந்திரு, வாய்க்கு வந்ததெல்லாம் பேசாதே.

(வாய்புதைத்து ஒதுங்கி நிற்கிறான்.)

**குலசேகரி** — (புகழேந்தியை நோக்கி) புலவர் பெரும! பெரியோர்க்குத் துன்பம் வருவது பிறர் நன்மையின் பொருட்டே யாகும். தாங்கள் சிறையின்கண் இல்லாதிருந்தால், அங்கிருந்த புலவர்களெல்லாம் தம் தலையைப் பறிகொடுக்க நேர்ந்திருக்குமன்றோ. தங்கள் ஒருவர்க்கு நேர்ந்த துன்பம் இத்தனை புலவர்களுடைய தலையைத் தப்புவித்தது. ஆதலால், மனங் கவலாதிருக்க வேண்டுகின்றேன்.

**குலோத்துங்கன்** — (தன் மனைவியை நோக்கி) பெண்மணீ! சமயோசிதமாய், உண்மையினை உற்றுணர்ந்து உரைத்தாய். இதனாலன்றோ மனைவியை மந்திரிக்குச் சமமாவும் பெரியோர் கூறுகின்றனர். (திரும்பி, புகழேந்தியை நோக்கி) புலவர் பெரும! சென்ற விஷயங்களைக் கருதாது, இனி, தாங்களும் நமது ஸம்ஸ்தான வித்வானவர்களும் ஒரு மனப்பட்டு நமது சபையின்கண் அமர்ந்திருக்க வேண்டுகின்றேன்.

(ஒட்டக்கூத்தர் மவுனமா யிருக்கிறார்)

**புகழேந்தி** — ஆஹா, அதற்கென்ன தடை. இனி அப்படியே இருக்கலாம்.

**குலோத்துங்கன்** — ஆனால் சரி, சந்தோஷம். தாங்கள் இருவரும் ஒருமனப்பட்டதற்கு அறி குறி யாது,

இதோ அருகிலிருக்கும் நெய்த்தானம் என்னும் ஸ்தலத்திலுள்ள கடவுளை விஷயமாக வைத்து வல்லொற்றுச் சந்தமாக ஒவ்வொரு சந்தவிருத்தம் பாட வேண்டுகின்றேன்.

ஒட்டக்கூத்தர் — அதற்கென்ன பாடலாம்.

**சந்த விருத்தம்**

விக்கா வுக்கா வித்தா விப்போய்
விட்டால் நட்டார் சுட்டூர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே
யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சூ
ழப்பா டத்தீ வெப்பா டப்பூண்
நெக்கா டக்கா னத்தா டப்போ
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே.

புகழேந்தி — நாமும் ஒன்று பாடுகின்றோம்.

**சந்த விருத்தம்**

தற்கோ லிப்பூ சற்பா சத்தே
தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே
முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்றா நெட்டோ டைப்பா ரைச்சேன்
மைப்பூ கத்தே றித்தா விப்போய்
நெற்றா ளுற்றா லைப்பா கிற்சேர்
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே.

(அனைவரும் சந்தோஷத்துடன் போகின்றனர்.



## ஐந்தாங் களம்

**இடம்:** ஒட்டக் கூத்தன் வீடும், வீதியும்.
**காலம்:** பின் மாலே.
**பாத்திரங்கள்:** குணவதி, (ஒட்டக்கூத்தர் மனைவி) ஒட்டக்கூத்தர், புகழேந்தி.

**புகழேந்தி** — (வீதியில் தனியே நின்று) இந்த ஒட்டக் கூத்தருக்கு நாம் ஒரு சிறு குற்றமும் செய்ததே மில்லே. இவரோ நம்மைக் கண்டது முதல் இதுவரையில் இகழ்ந்து பேசி, இன்னல் பல புரிந்து வருகின்ருர். எல்லாம் இருக்கட்டும். நாம் செய்த நளவெண்பாவைக் கேட்டு, கம்பர் முதலான புலவர்களும் வியந்து தலேயசைத்து மகிழ்ந்தனர். இவர் மட்டும் பற் பல விடங்களில் பற் பல துராக்ஷேபங்கள் செய்து, என்ன சமாதானங் கூறினும் ஒப்பவில்லே. இவரால் நமக்கு எப்போதும் துன்பமே உண்டாகும்போல் காண்கின்றது. இனி, இதனே நேரிற் கேட்டுத் தக்கவாறு முடிவு செய்தலே தகுதி. இப்போது அவரை வீட்டில்தான் காணவேண்டும். சரி, அங்கே செல்லுவோம்.

(சென்று ஒட்டக் கூத்தர் வீட்டு நடைவைக் கதவண்டை ஒடுங்கி நிற்கின்ருர்.)

**குணவதி.** — நாயக! பொழுதாகிறதே போஜனத்திற்கு வரவில்லேயோ?

**ஒட்டக்கூத்தர்** — பெண்ணே! எனக்கு இப்பொழுது போஜனம் வேண்டாம்.

**குணவதி** — பகலும் சரியாகப் போஜனங் கொள்ளவில்லே. இப்பொழுதும் வேண்டாம் என்ருல் எப்படி?

இப்படிச் செய்தால் தேகத்தில் அசவுக்கியம் உண்டாகாதா? எழுந்து வாருங்கள், கொஞ்சமாவது சாப்பிடுங்கள்.

ஒட்டக்கூத்தர் — கொஞ்சங்கூட வேண்டாம். எனக்கு ஏதோ பசி எடுக்கவில்லை. இப்போதுதான் வயிறு நிறைய உண்டாற்போல் திருப்தி யடைந் திருக்கின்றேன்.

குணவதி — ராஜ ஸம்ஸ்தானத்தில் ஏதேனும் விருந்து உண்டோ இன்று?

ஒட்டக்கூத்தர் — விருந் தென்றாலும் விருந்தா — அந்த விருந்து, முதலில் செவிக்கு உணவாயிருந்து, பின்பு, வயிற்றுக்கும் உணவாய் விட்டது.

குணவதி — செவியுணவு வயிற்றுணவு எப்படி யாகும்? வேடிக்கையாகச் சொல்கிறீர்களோ?

ஒட்டக்கூத்தர் — வேடிக்கை யல்ல, உள்ளபடியே சொல்கின்றேன். நான் அடிக்கடி ஒரு புலவரைப்பற்றி பேசுவேனே, ஞாபகம் இருக்கிறதா?

குணவதி — ஆமாம், அவரை சிறையி லிட்டதாகவும், அவரை அடக்கிவிட்ட தாகவும் சொன்னீர்கள். அவர் பெயர் (மெதுவாக) புகழேந்தியார் என்றல்லவோ உரைத்தீர்கள்.

ஒட்டக்கூத்தர் — ஆமாம், ஆமாம்; அவர்தான், அவர்தான்; நான் அம் மகானுபாவரை வீணே பழிக்கு ஆளாக்கிச் சிறையில் அடைப்பித்தேன். அன்றி, பலகாலும் அவதூறும் பேசி வந்தேன்.

குணவதி — அதனால் என்ன! அதை நினைத்தா இப்போது வருந்துகிறீர்கள்?

**ஒட்டக்கூத்தர்** — வருத்தமென்றால் கொஞ்சமா! கற்றறிந்தார் கடிய வேண்டுவன பொய், பொறாமை, கொலை முதலிய துர்க்குணங்களாம். உன்னால் இவை யனைத்தும் என்னிடமே குடிகொண்டிருப்பதாகத் தோன்றுகிறதே. ஒரு சிறு குற்றமும் செய்யாத புகழேந்தியாருக்கு யான் இழைத்த தீங்கு கொஞ்சமா! ஐயோ, பொறாமை எவ்வளவு தீங்கை விளைத்துவிட்டது! நாய், கோழி, புலவர் முதலானவர் காரணமின்றிப் பொறாமை கொண்டு பகைப்பர் என்று சொல்வர்களே, அதற்கு, யானே ஏற்ற திருஷ்டாந்தமாக இருக்கின்றேனே. ஆஹா! இன்று அவர் இயற்றிய நளவெண்பா என்னும் நூலை மன்னர் முன் அரங்கேற்றினார். அந்தச் சொல்லமைப்பும், பொருள் ஆழமும், ஓசையுடைமையும் எவ்வளவு அழகாய் இருந்தன! எல்லோரும்கேட்டு மகிழ்ந்தனர். யான்மட்டும் என் பொறாமை காரணமாக, பற்பல விடங்களில் தடுத்துத் துராக்ஷேபம் செய்தேன். அவற்றிற் கெல்லாம் அம் மகானுபாவர் எவ்வளவு பொறுமையுடன் விடை கூறினார். அந்த நளவெண்பா வென்னும் அமுதம் என் செவி வழியாகச் சென்று, வயிற்றில் நிறைந்து உணவாய் விட்டது. அதனால்தான் போஜனம் வேண்டா மென்றேன்.

**புகழேந்தி** — (ஓடிவந்து) **ஆஹா, என் எண்ணம் பலித்துவிட்டது. ஐயா! உம்முடைய உள்ளுறையான எண்ணத்தை யறியாது, உம்முடன் வாதாட வந்தேன். வந்தது எனக்கு நற்காலமாக முடிந்தது. கோபம் முதிர்ந்து கொலையும் நடக்குமோ வென்று**

அச்சத்துடன் மனங்கொதித்து வந்தேன். ஆனால், எல்லாம் இனிமையாகவே முடிந்தன "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்பது வீணாகுமா !

ஒட்டக்கூத்தர் — புலவர் பெரும! யான் தமக்கு இழைத்த இன்னல்களை மறந்து இதுமுதல் நட்புப் பாராட்ட வேண்டுகின்றேன் !

புகழேந்தி — இன்னும் அதற்குத் தடையுண்டோ !

(கைகோத்துக் குலவுகின்றனர்.)



# King Janaka:

*[Adapted and Dramatised in Tamil from King John and the Abbot of Canterbury]*

THIS PIECE
WAS DEDICATED
WITH HIS KIND PERMISSION TO



THE LORD BISHOP OF MADRAS
IN MARCH, 1909

AN INTERLUDE

# ஜநகன்:

## நாடக பாத்திரங்கள்:

**இடம்** — ஏமாங்கதபுரத்தில் ஜநகன் அவையும், கன்ன புரியில் பிங்கலன் மாளிகையும்.

1. **ஜநகன்** — ஏமாங்கதபுரத்தின் இறைவன்.
2. **பிங்கலன்** — கன்னபுரியிலுள்ள ஒரு சந்நியாசி.
3. **வாகீசன்** — பிங்கலன் வேலையாள்.

## நாடக விஷயம்

### களம் — I.

ஜநகன், பிங்கலன் அடைந்துள்ள செல்வத்தைக் கண்டு, பொருமை கொண்டு, பிங்கலன்மீது வீண்குற்றஞ் சாட்டுதல். பின்பு ஜநகன் மூன்று கேள்விகள் கூறி, அவற்றிற்குப் பிங்கலன் விடையளிக்கத் தவறினால், அவனைச் சிரச்சேதம் செய்வதாய்க் கூறுதல். பிங்கலன் இருபத்தொரு நாட்களில் கூறுவதாய் விடைபெற்றுச் செல்லுதல்

### களம் — II.

பிங்கலன், கேள்விகளுக்கு விடை தோன்ருமல் வெறுப் படைதல். வாகீசன் பிங்கலன்போல் வேடங்கொண்டு அரச-னுடைய வினுக்களுக்கு விடை கூறுவதாகப் பிங்கலனைத் தேற்றுதல்.

### களம் — III.

வாகீசன் பிங்கலனுடைய உடையோடு அரசன்முன் தோன்றி, விநோதமாக விடைகூறிப் பிங்கலனைத் தப்புவித்-துத் தன் மெய்யுருவைக் காட்டுதல்.

# ஜநக ராஜன்

## முதற் களம்

**இடம்:** ஜநகன் அவைக் களம்.
**காலம்:** முற் பகல்.
**பாத்திரங்கள்:** ஜநகன், மந்திரி, பிரபுக்கள், பிங்கலன்.

ஜநகன் — ஐயா, பிங்கலரே! உம்மைப்பற்றிப் பற்பல விஷயங்கள் கேள்விப்படுகிறோம். அவை யெல்லாம் எமக்கு உம்மிடத்தில் வெறுப்பையும் விரோதத்தையும் உண்டாக்குகின்றன. அவற்றைத் தெரிவிக்கவே உம்மை இங்கு வர வழைத்தோம்.

பிங்கலன் — அரசே! தங்களுக்கு அவ்வாறு வெறுப்பும் விரோதமும் உண்டாக அடியேன் யாதொன்றும் செய்ததில்லை. தயைசெய்து தெரிவித்தால் தக்கவாறு நடந்துகொள்ளக் காத்திருக்கின்றேன்.

ஜநகன் — இதெல்லாம் வீண் பேச்சு. உம்முடைய உட் கருத்தை நாம் நன்கு உணர்ந்தோம். நீர் நமது ராஜாங்கத்திற்கு விரோதமாய் அநேக காரியங்கள் செய்துவருகின்றீர். நீர் உமது வீட்டை வைத்திருக்கும் மாதிரியும், உம்முடைய வேலையாட்களின் தொகையும், உமது நண்பர்களின் மிகையும் எமக்கே அச்சத்தை விளைவிக்கின்றன. சாமானியர் என்ன மதிப்பார்கள், எண்ணிப் பாரும்.

**விருத்தம்**

இவையெலாம் அரசாட் சிக்கோர்
இன்னலே யிழைப்ப தற்காம்
நவையுறுஞ் சூழ்ச்சி யென்றே
நாமறிந் திட்டோம் இன்னும்
புவியுளோர் உமது செய்கை
பூண்டுபல் கலகஞ் செய்யக்
கவிவரே யவற்றிற் கெல்லாம்
காரணம் நீரே யன்றோ.

பிங்கலரே ! இதற்கு என்ன நியாயம் கூறுகின்றீர் ?

பிங்கலன் — அரசே ! அடியேனைத் தாங்கள் அவ்வாறு மதிக்கவேண்டா. அடியேன் ஒருபோதும் துரோக சிந்தை கொண்டவ னல்லன்.

ஜநகன் — கொள்ள வில்லையா ! சரி, இருக்கட்டும். உமக்கு நமது அரண்மனையினும் சிறந்த உயர்நிலை மாடங்களும், ஒரு நூறு வேலை யாட்களும், ஓரைம்பது பிரபுக்களும் எதற்கு? உமது வீட்டிற்கு வேண்டுவன யாவும் இந்த ஏமாங்கதபுரத்தினின்றும் அஞ்சல்மேல் வருகின்றனவாமே. இவற்றின் கருத்து யாது ? முன்பு வீட்டை யாண்டால், பின்பு நாட்டை யாளலாம் என்னும் கருத்தே யன்றோ? உமக்கு இவ்வளவு செல்வம் எப்படி வந்தது ?

பிங்கலன் — அரசே! அடியேன் விண்ணப்பத்தைத் தயை கூர்ந்து கேட்டருளினால், இவ்வாறு எண்ணுவதற்கு இடமிராது என்று நினைக்கின்றேன். சற்று மனங் கொண்டு கேட்டருள வேண்டும்.

ஜநகன் — என்ன விண்ணப்பம் சொல்லும் பார்ப்போம்.

பிங்கலன் — அரசே! அடியேன் அநுபவிக்கும் இந்தச் செல்வம்,

**விருத்தம்**

தந்தைதாய்ப் பொருளு மன்று
சகோதரர் பொருளு மன்று
முந்தையோர் பொருளு மன்று
முறைதவிர் பொருளு மன்று
வந்ததோர் மனைவிக் குற்றார்
வழங்கிய பொருளு மன்றென்
சிந்தையும் உடலும் சோரத்
தேடிய பொருளாம் மன்னா.

ஆகையால், அடியேன் அரிதிற் றேடிய பொருளை அநுபவித்து, இன்பமடையுங் கருத்தினால், இவ்வாறு செய்வதல்லது வேறு கருத்து யாதும் அன்று.

ஜநகன் — ஓஹோ, அப்படியா, நன்று நன்று, வெகு நன்று, இந்தக் கருத்தே போதும். ராஜத்துரோகம் செய்ய இதனிலும் இன்னும் என்ன எண்ண வேண்டும். அரசனைப் போல் அநுபவிக்க விரும்பினால், அரசாட்சியைத் தானே அடையவேண்டும். விளங்கிற்று, விளங்கிற்று. இன்னும் ஒன்றும் பேசவேண்டா. இந்தக் குற்றம் சிறிதும் மன்னிக்கத் தக்க தன்று. ஆயினும், இப்போது, மூன்று கேள்விகள் கேட்கின்றோம். அம் மூன்றுக்கும் விடை கூறினால், தப்பிப் பிழைக்கலாம். இன்றேல், சிரச் சேதம் செய்யப்படுவீர். என்ன சொல்கின்றீர்?

பிங்கலன் — அரசே! யான் நிரபராதி. தங்களுக்கேனும், தங்கள் அரசாட்சிக்கேனும், என் மனோவாக்கு காயங்களால் சிறு பிழையும் இழைத்தே னில்லை.

"வேந்தன் சீறின் ஆந்துணையில்லை" என்பர் மேலோர். அதுபோல், தேவரீரே சீற்றங் கொண்டால், அதனை யாவர் தணிப்பவர். கடல் நீர் முற்றும் வெப்பங் கொண்டால், அதனை மற்ற எந்த நீரால் ஆற்றுவது.

ஜனகன் — இவை யனைத்தும் பிறரை வசப்படுத்தும் வஞ்ச மொழிகள். இதனால் யாம் சிறிதும் மயங்கோம். இம் மூன்று கேள்விகளுக்கும் ஏற்ற பதில் கூறும். இன்றேல், தலை தக்ஷணமே இடறிப்போம்.

பிங்கலன் — அரசே! தயை கூர்ந்து அந்தக் கேள்விகளை வெளியிட்டால், கூடியவரையில் யோசிக்கின்றேன்.

ஜநகன் — சரி! கேளும்.

முதலாவது —

**விருத்தம்**

சிரந்தனில் மகுடந் தாங்கிச்
சிங்கவா தனத்தில் மேவிப்
பொருந்திடு மமைச்சர் சூழப்
பொலியுமிப் பதவி கொண்டே
இருந்திடும் நிலையை நீரோர்
இம்மியும் பிசகி லாமல்
பரந்தநல் விலையெ மக்குப்
பகர்ந்திட வேண்டும் கண்டீர்.

இரண்டாவது —

**விருத்தம்**

இப்பெரும் உலக முற்றும்
எத்தனை நாட்க டம்மில்
திப்பிய மாகச் சுற்றிச்
சேர்தலாம் செப்ப வேண்டும்.

மூன்றாவது —

இப்பொழு தெம்ம னத்துள்
எண்ணிடு மெண்ணந் தன்னைத்
தப்பிலா வகையிற் சொன்னால்
தலையது தப்புந் தானே.

பிங்கலன் — அரசே! தங்கள் வினாக்கள் முற்றும் விளங்க வில்லை. தயை கூர்ந்து விளக்கமாகக் கூறவேண்டும்.

ஜநகன் — விளங்க வில்லையா! நல்லது, மிக விளக்கமாகக் கூறுகின்றோம், கேளும்.

முதலாவது — நாம் மணிமுடி தரித்து, மந்திரி பிரதானியர் புடைசூழ, இந்தச் சிங்காதனத்தின்கண் வீற்றிருக்கும்பொழுது, எம்முடைய நிலை, என்ன விலை பெறும்? இம்மியளவும் விடாது விலையிடவேண்டும்.

இரண்டாவது — நாம் இந்தப் பூதலத்தை எவ்வளவு காலத்தில் சுற்றிவரக் கூடும்?

மூன்றாவது — இப்பொழுது நாம் மனத்தில் என்ன நினைக்கின்றோம்?

ஆகிய இவைகளே கேள்விகள். விடை கூறினால் உமது தலை உடலில் தங்கும். இன்றேல் தறிபட்டுப் போகும்.

பிங்கலன் — அரசே! அடியேன் என்னென்று இவற்றிற்கு விடை கூறுவேன்.

**விருத்தம்**

வள்ளலே நீரிப் போது
வழுத்திய கேள்வி மூன்றும்
தெள்ளறி வுடையோர் தாமும்
செப்புவ தருமை யென்றால்

வெள்ளறி வுடைய நாயேன்
விளம்புதற் காமோ மூவேழ்
ஒள்ளிய நாட்கள் தந்தால்
உரைக்குவன் முயன்று மன்னு.

**ஜநகன்** — ஓஹோ, சரி, சரி, மூன்று கேள்விகளில் ஒவ்வொன்றுக்கும் ஏழு நாட்களாக இருபத்தொரு நாட்கள் வேண்டுகின்றீரோ? சரி, அவ்வாறே யளிக்கின்றோம். இதற்குள் அக் கேள்விகளுக்குத் தக்க விடை யளிக்காவிட்டால், உம்முடைய ஆயுள் நிலை இந்த இருபத்தொரு நாட்களே யாகும். பிறகு, உமது உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றும் ராஜாங்கத்தாரால் பறிமுதல் செய்யப்படும். இருபத்தொரு நாட்கள் என்பது ஞாபகத்தில் இருக்கட்டும். போம், போம்.

[அரசன் முதலாயினோர் எழுந்து செல்கின்றனர். பிங்கலன் அரசனை வணங்கித் திரும்புகின்றான்.]



## இரண்டாங் களம்

**இடம்:** பிங்கலன் மாளிகையின் அருகு.
**காலம்:** பிற்பகல்.
**பாத்திரங்கள்:** வாகீசன், பிங்கலன்.

**பிங்கலன்** — (*தனியே*) ஐயோ, நமக்கு அகால மரணத்திற்குச் சமயம் நெருங்கிவிட்டாற்போல் காண்கிறது! இவ் விஞக்களை யுன்னும்போதே உயிர் துடிக்கிறது! எப்படிப்பட்ட புத்திமான்களுக்கும் சிறிதும் புலப்படவில்லை. என்ன செய்வது! உயிர்மேலுள்ள ஆசையை அணுவும் வைக்கலாகாது. இனி நமது வீட்டிற்குச் சென்று, தக்க ஏற்பாடுகள் செய்து விட்டு, மரண தண்டனைக்குச் சித்தமாய் இருப்பதே தகுதி. ஐயோ, தன் பொருளை யநுபவிக்கவும் தண்டனை யென்றால், இன்னும் என்ன செய்வது!

(*வாகீசன் எதிர்ப்படுகின்றான்.*)

**வாகீசன்** — ஐய! தாங்கள் சென்று நெடு நாட்கள் ஆயின. ஜநக மஹா ராஜரிடத்திற்குச் சென்றிருந்தீர்களே, அங்கு ஏதேனும் விசேஷ முண்டோ?

**பிங்கலன்** — வாகீச! என்ன விசேஷம், என் தலை போகும் விசேஷந்தான். யான் இவ் வுலகிலிருப்பது இன்னும் மூன்று நாட்களே. இந்தத் துக்க விஷயமே யன்றி, வேறு விசேஷ மில்லை.

**வாகீசன்** — ஐய! என்ன, என்ன! விஷயம் என்ன! சற்று விவரமாய்ச் சொல்லுங்கள். தலை போகும்படி என்ன தப்பு செய்தீர்கள்? ஒன்றுந் தெரிய வில்லையே?

பிங்கலன் — வாகீச ! அவற்றை யெல்லாம் உனக்குச் சொல்லிப் பயனென்ன. கூர்ந்த புத்திமான்களாலும் அசைக்க முடியாத விஷயம். புத்தி நுட்பத்தால் ஆராயத்தக்கது. நமது அரசர் என்னை ராஜ துரோகியாக எண்ணிச் சிரச்சேதம் செய்யத் தீர்மானித்தனர். பிறகு, மூன்று கேள்விகள் கேட்பதாயும், அவற்றிற்கு யான் விடை கூறினால் மன்னிப்பதாயும் சொல்லி, அவ் வினாக்களையும் வெளியிட்டார். அக் கேள்விகளில் ஒன்றுக்கேனும் விடை கூற முடியவில்லை. பிறகு, இருபத்தொரு நாட்களில் கூறுவதாக விடைபெற்றுக்கொண்டு திரும்பினேன். அங்கிருந்து சென்னையி லுள்ள சர்வ கலாசாலைப் புலவர்களையும், மதுரையம் பதியிலுள்ள சங்கப் புலவர்களையும் சந்தித்து, அக் கேள்விகளை வெளியிட்டேன். அப் புலவர்களெல்லாம் தனித்தும் ஒன்று கூடியும் ஊகித்தனர். ஒன்றுக்கேனும் ஏற்ற விடை புலப்படவில்லை. முடிவில் இவை யெல்லாம் குதர்க்க வினாக்கள். இவற்றிற்கு என்ன பதில் கூறுவது, போம் என்றனர். அது கேட்டு, உயிர்மேல் இருந்த ஆசை முற்றும் கைவிட்டு, இங்கு வந்து செய்யவேண்டிய ஏற்பாடுகளைச் செய்து முடித்து, மரண தண்டனை அடையத் தீர்மானங்கொண்டு வந்தேன். இது தான் விஷயம்.

வாகீசன் — ஐய ! சில விஷயங்களில் மூடனும் வித்துவானை வென்றுவிடலாம். மாட்டுக்காரச் சிறுவன் ஒளவையை மயங்க வைத்தா னென்பதும், சிறு பிள்ளை வித்துவானை வென்றானென்பதும் கேட்டதில்லையா ! யான் தங்கள் வீட்டில் குற்றேவல் செய்பவனாயினும் ஓய்ந்த காலத்தில் சிற்சில நூல்களை வாசித்து

வந்தேன். அதனால், அடியேனுக்குச் சிறிது கல்வியறிவும் உண்டு. தயை செய்து, அக் கேள்விகளை வெளியிட்டால், என்னாற் கூடியவரையில் விடையளிப்பேன்.

பிங்கலன் — ஆ, ஆ, வெகு சந்தோஷம், எப்படி யாயினும் காரியம் நிறைவேறவேண்டும். 'சிற்றுளியால் கல்லுந் தகரும்' என்பார்கள். அதனால் சொல்கின்றேன் நன்றாய்க் கேள்.

முதலாவது — அரசர், தம் முடியோடு சிங்காதனத்தில் மந்திரி முதலாயினார் புடைசூழ வீற்றிருக்கும்போது அவருடைய மதிப்பு எவ்வளவு? இம்மியும் பிசகாமல் விலையிடவேண்டும்.

இரண்டாவது — அவர் இவ் வுலகத்தை எவ்வளவு காலத்தில் சுற்றிவரக் கூடும்?

மூன்றாவது — அவர் அந்தச சமயத்தில் எண்ணும் விஷயம் யாது? ஆகிய இவைகளே கேள்விகள்.

வாகீசன் — ஐய! இதற்கா பின்வாங்கி அஞ்சினீர்கள்!

அகவல்

அச்சம் வேண்டா அச்சம் வேண்டா
நிச்சய மாகவே நெஞ்சிற் களிப்பு
கொள்ளும் கொள்ளும் குலவிய துயரைத்
தள்ளும் தள்ளும் தட்சணம் சென்று
வேந்தன் களிக்க விடைகளைக் கூறித்
தாந்திரி கத்தால் தலையைமீட் டிடுவேன்.

பிங்கலன் — இயற்றமிழ்ப் புலவர்களெல்லாம் இவ்வளவும் கூறமுடியாமற் போனார்களே. நீ இவ்வளவு கூறியதும்

என் மனத்தில் ஆநந்தத்தை விளைவிக்கின்றது. நல்லது, நீ அவ்வாறே செய்தால், எனக்கு உயிர்ப் பிச்சை கொடுத்தபடி யாகும்.

வாகீசன் — ஐய! ஒரு விண்ணப்பம், அது என்னை யெனின், யான் ஏமாங்கதபுரம் சென்றால், தங்களுக்கும் எனக்கும் வேற்றுமை தோன்றாவண்ண மிருக்க வேண்டும். அதற்காகத் தாங்கள் இப்போது அணிந்துள்ள உடையை உதவினால், காரியசித்தி பெற்று வருவேன்.

பிங்கலன் — அப்பா, வாகீச!

அகவல்

உயிரினும் சிறந்ததிவ் வுலகினி லுண்டோ
மயர்விலா அறிவின் மைந்தனே உனக்கென்
ஆடை தருவேன் அணியும் தருவேன்
வாடை தருவேன் வாகனந் தருவேன்
அரசவை செலத்தகும் அடைவெலாந் தருவேன்
பரசுமன் போடு படர்குவை யின்னே.

வாகீசன் — சரி, ஐய! ஒரு நொடிப் பொழுதில் சென்று வென்று வருகின்றேன்.

[பிங்கலன் ஆடை யணிகளை யளிக்கின்றான். வாகீசன் அவற்றை யணிந்து, அரசன் அவைக் களத்தை யடையச் செல்கிறான்.]



## மூன்றாங் களம்

**இடம்:** ஜநகன் அவைக் களம்.
**காலம்:** முற் பகல்.
**பாத்திரங்கள்:** ஜநகன், பிரபுக்கள், வாகீசன்.

(வாகீசன் வந்தனஞ் செய்கிறான்.)

**ஜநகன்** — ஓகோ, வாரும், வாரும் பிங்கலரே. விடையை விடுக்க வந்தீரோ? தலையைக் கொடுக்க வந்தீரோ?

**வாகீசன்** — அரசே! தலையை எடுப்பதும் விடுப்பதும் தங்கள் தயை. அதற்கு முன் ஒரு விண்ணப்பம். அதனை மனங்கொண்டு கேட்டருளவேண்டும்.

**ஜநகன்** — ஒன்றென்ன, இரண்டும் ஆகலாம்.

அகவல்

படியினைப் புரக்கும் பார்த்திப ரேறே
அடியேன் புகலும் அடைவினைக் கேண்மோ
இருளற நோக்கின் இந்த நீதித்தலம்
அருள்விளங் கிடுமோர் ஆலய மாகும்
இதன் கண் நீதியை இயற்றுமே தாவியர்
மதிமிகும் சிறப்பின் மானிட ராயினும்
அருவுரு வான ஆதியங் கடவுள்
கரந்தனிற் கொண்ட கருவியே யனையார்
சத்தியம் விளங்கச் சார்ந்தவர் முடிவை
நித்தியம் புகலும் நியாயா திபர்கள்
வஞ்சகம் முதலிய மனத்தின் மாசொடு
துஞ்சுமக் கோயிலில் துகளுறப் புகுதலும்
பொருள் பெறல் முதலாம் புன்மைச் செயலொடு
அருளா லயத்தை அசுத்தப் படுத்தலும்

செய்யின் அப் பதகர் தம் தேசத் திற்கும்
மெய்யுரு வான விமலன் றனக்கும்
துரோகிய ராகச் சொல்லப் படுவரே
வரோதய அன்றியும் மன்னவன் செலுத்தும்
ஆண்மை யவன்றன் ஆண்மையே யன்று
காணகில் லாத கடவுடன் ஆணையே.

[The court of justice is a sacred temple ; the Judges presiding over it are, though men, humble instruments in the hands of an unseen deity, who influences their judgments in the interest of truth, and those who enter this holy edifice with unholy thoughts or desecrate it with unworthy actions are traitors to their God and Country. The power you, as a judge, called upon to exercise in the name of your sovereign is a power divine.]

ஜநகன் — பிங்கலரே, எம்மிடம் பஞ்சாங்கமா படிக்க வந்தீர்? இவையெல்லாம் நமக்குப் பழங் கதைகள். நமது கேள்விகளுக்கு விடை யுண்டா, இல்லையா சொல்லும். இன்றேல், பிங்கலர் இங்கு தங்கலர் ஆவீர்.

வாகீசன் — அரசே ! கோபிக்க வேண்டா. தங்கள் வினைக்களைத் தனித்தனிக் கூறினல், அடியேனும் கூடும்வரையில் விடை யளிக்கின்றேன்.

ஜநகன் — கூடியவரையிலா அளிக்கின்றீர் ! இருக்கட்டும். முதலாவது —

விருத்தம்

சிரந்தனில் மகுடந் தாங்கிச்
சிங்கவா தனத்தில் மேவிப்
பொருந்திடு மமைச்சர் சூழப்
பொலியுமிப் பதவி கொண்டே

இருந்திடும் நிலையை நீரோர்
இம்மியும் பிசகி லாமல்
பரந்தநல் விலையெ மக்குப்
பகர்ந்திட வேண்டும் கண்டீர்.

பாகீசன் — அரசே!

அகவல்

மன்னுமிவ் வுலகில் வாழ்தரு முயிர்க்காத்
தன்னுயி ரளித்த தயாபரன் தன்னை
மூடராம் யூதர் முப்பது வெள்ளி
நீடிய காசென நினைத்து மதித்தனர்
எவரும் அவருக் கிழிந்தவ னன்றோ
அவனிக் கரசே அதனால் உம்மை
இருபத் தொன்பதாம் எழில்வெள் ளிக்கே
கருதுறு விலையாக் கணித்திடு கின்றேன்.

விதூஷகன் — ஐயா! நில்லும், நில்லும். அதை எல்லோ-ரும் அறியச் சொல்லும்.

வாகீசன் — அப்படியே, இந்த உலகிலுள்ள உயிர்களுக்காகத் தன்னுயிரை யளித்த ரக்ஷகரை, மூடராகிய யூதர்கள் முப்பது வெள்ளிக்காசுக்கு விலை மதித்தனர். அரச ராயினும் அந்த ரக்ஷகருக்கு இழிந்தவரே. அதனால், உம்மைக் கொஞ்சம் குறைத்து, இருபத்தொன்பது வெள்ளிக் காசுக்கு விலை மதிக்கின்றேன்.

ஜநகன் — இவ்வளவு தானா! இவ்வளவு தானா! இருபத்-தொன்பது வெள்ளிதானா! என் மதிப்பு இவ்வளவு சொற்பமான தென்று நான் ஒருபோதும் எண்ணிய தில்லையே. இருக்கட்டும், இந்த இரண்டாவது கேள்விக்கு என்ன சொல்கின்றீர்?

**விருத்தம்**

இப்பெரும் உலக முற்றும்
எத்தனை நாட்க டம்மில்
திப்பிய மாகச் சுற்றிச்
சேர்தலாம் செப்ப வேண்டும்.

வாகீசன் — ஆஹா! இவ் வுலகமோ மிகப் பெரிது. 'பெரிது பெரிது புவனம் பெரிது' என்பர். ஆயினும், அடியேன் கூறும் வண்ணம் செய்தால், மிக விரைவில் அதைச் சுற்றி வரலாம்.

ஜநகன் — அந்த வழிதான் நமக்கு வேண்டும். சொல்லும்.

வாகீசன் — அரசே!

**விருத்தம்**

காலையில் எழுந்தி ருந்து
கதிரவ னோடு சேர்ந்து
மாலைபோய் பின்னாட் காலை
வந்திடும் வரையி லந்தே
வேலையா யவன்பின் னோடி
விரைவுடன் வருவீ ராயின்
ஏலவோர் நாளில் சுற்றி
இருப்பிடம் சேர லாமே.

அரசே! தாங்கள் அதிகாலையில் எழுந்து, சூரியனிடத்திற்குப் போய், அவனோடு சேர்ந்து, மறுநாள் காலை வரையில் அவனைப் பின்தொடர்ந்து ஓடி வந்தால், இந்தப் பூமியை ஒரே தினத்தில் சுற்றி வரலாம்.

ஜநகன் — ஆ, ஆ, ஆ! நல்ல வழி, நல்ல யோசனை! இது வன்றோ யோசனை! இருக்கட்டும், இந்த மூன்றாவது கேள்விக்கு என்ன செய்வீர்?

இப்பொழு தெம்ம னத்துள்
எண்ணிடு மெண்ணந் தன்னைத்
தப்பிலா வகையிற் சொன்னால்
தலையது தப்புந் தானே.

வாகீசன் —

**விருத்தம்**

மகிபரே என்னை நீர் இங்கு
வந்தபிங் கலரே யாக
மிகநினைக் கின்றீர் யானம்
மேலவன் வீட்டில் வேலை
தகவுறச் செய்து வாழும்
தாசனே யவரை மீட்கும்
அகமுடன் அவர்தம் வேடம்
அடைந்திவண் வந்தேன் பாரீர்

அரசே! தாங்கள் இப்போது என்னைப் பிங்கலர் என நினைக்கின்றீர். நான் பிங்கலர் அல்லன். அவருடைய வேலையாள். அவரது தலையைத் தப்புவிக்கும் பொருட்டு அவர்போல் ஆடைதரித்து வந்தேன் பாரும்.

ஜநகன் — ஆ, ஆ, ஆ, வெகு சந்தோஷம். என்ன அறிவு! என்ன புத்தி! ஆ, ஆ, நீர் மிகச் சமர்த்தர்; நீர் விரும்பியபடியே பிங்கலரை மன்னிக்கத் தடையில்லை. ஆனால், அவருடைய பொருள்களை யெல்லாம் பறிமுதல் செய்து, உமக்குக் கொடுத்துவிடுகின்றோம். அவற்றை நீர் பரிசாகப் பெற்றுக்கொள்ளும்.

வாகீசன் — அரசே! அடியேன் அந்தப் பிங்கலரால் போஷிக்கப்படுபவன். ஆகையினால், இந்த உடல் பொருள் ஆவி மூன்றும் அவருடையன. தாங்கள் அவரை

மன்னித்தால், அடியேன் அவற்றை எல்லாம் அடைந்தபடியே யாகும்.

ஜநகன் — ஐய ! உம்முடைய கூர்ந்த புத்தியும், செய்ந்நன்றி மறவாமையும் மிக வியக்கத்தக்கனவாகும். இனி, நீர் மாதந்தோறும் ஒரு நூறு வராகன் சம்பளம் பெற்று, நமது அரண்மனை வித்துவானாக அமர்ந்திரும். உமதுபொருட்டாகப் பிங்கலரை மன்னித்தோம் என்று அவருக்குக் களிப்புடன் அறிவியும்.

வாகீசன் — அரசே ! அவ்வாறே செய்கின்றேன்.

(வணங்கித் திரும்புகின்றான்.)

# Prince Desing:

[*Adapted and Dramatised in Tamil from the Tales of Ind., by T. Ramakrishna — the South Indian Poet.*]

THIS PIECE
WAS DEDICATED
BY KIND PERMISSION TO



H. E. THE GOVERNOR OF MADRAS
IN MARCH, 1907.



AN INTERLUDE

# நாடக விஷயம்:

## களம் — I.

தேசிங்கு மன்னன் தன் அத்தாணி மண்டபத்தின்கண் மந்திரி முதலாயினோர் புடைசூழ வீற்றிருந்தனன். அப்போது, ஆறுகாட்டினின்றும் ஒரு தூதுவன் வந்து, ஐந்து வருடத்திற்குச் சேரவேண்டிய திரைப் பணத்தைச் செலுத்தினாலன்றி, இவ்விராச்சியம் உம்மிடம் நிலைபெறாதென்று, நபாபு கூறியதாகச் சொல்லினான். அதுகேட்ட மன்னன் கடுங்கோபங் கொண்டு, திரைப்பணத்தைச் செலுத்துவதில்லையென்று மறுத்தனன். தூதுவன் போய்விட்டான்.

## களம் — II.

சில நாட்கள் சென்று, நபாபு, செஞ்சிக்கோட்டையின் மேல் படை யெடுத்து வந்தான். அரசன் அதனை யுணர்ந்து, அந்தப்புரஞ் சென்று, திரையின் புறத்திலிருந்து, தன் மனைவி யிடம் விடை பெற்றுக் கொண்டு, சண்டைமேற் சென்றான். அங்கு பெரும்போர் புரிந்து, முடிவில் தேசிங்கு மாற்றலன் செய்த வஞ்சனையாற் றனக்குத் தோல்வியுறுவதை யுணர்ந்து தற்கொலை செய்து கொண்டான்.

## களம் — III.

மாண்ட மன்னனைப் போர் வீரர் தாங்கி வந்து அரண்மனையை யடைந்தனர். அது கண்ட அரசி ஆறாத் துயர முற்று, தன் கணவனோடு தீக்கண் பாய்ந்தாள். அதுகேட்ட நபாபு மிக்க மனமுளைந்தான்.

# தேசிங்கு மன்னன்

## அகவல்

திருவளர் கமலத் தேன்மொழிப் பாவாய்
உருவளர் வேனிலா யுற்றநல் லணங்கு
நின்னுரு வெழிலை நிலைபெறக் கொள்வான்
மன்னுமாந் தளிரால் வடிவினைக் காட்டி
முல்லைமென் முகையால் பல்லெழில் விளக்கிச்
சொல்லருங் கிளியால் சொல்லியல் வயக்கி
மாங்குயில் தன்னால் மகிழிசை தோற்றித்
தேங்கிய நீரில் திகழ்பல மலரால்
மற்றும் பல்லுரு மருவிட வயங்கி
உற்றனள் அவளை உவப்புடன் காண்போம்
இதுகாண் —
உயரிய முடியும் ஓங்குதொன் மதிலும்
புயறவழ் மாடமும் பொறிகளுஞ் செறிந்து
கண்டோர்க் கிவணோர் காவல னுண்டென
விண்டிடு செஞ்சி வெற்பின் மீமிசை
பரிதி வானவன் பரவைப் பாயலில்
பெரும்பொழு துறங்கிய பிழையுளத் துன்னிப்
பல்லா யிரக்கை பரப்பித் துதிபல
சொல்லிநிற் பான்போல் துலங்குவன் காணாய்
அதான்று,
சேய்மையி லுள்ள சீறூர் மாந்தர்
தூய்மையா யுடுத்துத் துலங்குமிக் காலையில்
கூட்டமாய்க் குலவிக் கூட்டினைக் குறுகும்
நாட்டமார் வண்டென நண்ணுவர் காணாய்.

["ஏட்டைக் கட்டி யெழுத்தோ டெழுத்து வைத் திணைத்துக்கட்டி யிசைகட்டும்" பாவினங்களில், "சொன்-னோக்கும் பொருணோக்குந் தொடைநோக்கும் நடை நோக்குந் துறையினோக்கோ டெங்நோக்கும்" காணும் நசையினால், அல்லும் பகலும் அல்லலுறுந் தன்மையினை யுடைய பாவலரொருவர், தம் மன்னவனது செங்கோன்-மையையும், கல்வி கேள்வி ஒழுக்கம் முதலிய நற்செயல்-களையும் செய்யுளின்கண் செப்பமாக வமைத்து, தன் குடிலுக் கருகில் ஓங்கி யுயர்ந்த பனை மடலில் வரைந்து பாடுவான் ஒரு புறத்து வதிந்தனர்.

அகத்திற் றுயரை முகத்திற் கொண்ட மள்ளர் பலர் ஒன்று குழுமி, தம் நாட்டிற் கண்மையிலுள்ள மலைமுழை-களில் வதியும் வேங்கை முதலாயுள்ள துட்ட மிருகங்கள், இரவுதோறும் ஊர்களிற் புக்கு, தாம் தம் மக்களேபோல் ஓம்பிவரும் கால்நடைகளை, தம் உணவின்பொருட்டுக் கோறல் புரிந்து நிர்மூலப்படுத்தும் நேர்மையினை, வேட்-டஞ் செய்யும் விருப்பினையே மிகுதியுங் கொண்ட தமது வேந்தனுக்கு விண்ணப்பஞ் செய்வான் ஆண்டுப் போந்து ஒருபால் நிறைந்தனர்.

பல்வகைய வருணத்தினர் குழுமிய அக் கூட்டத்தில் அரச வங்கத்தினரும் அநேகர் செறிந்திருந்தனர். மற்றும் பல்லோர், செங்கோல் செலுத்தும் தேசிங்கு மன்னன், கொலுவமர்ந் திருக்குங் கோலத்தினைக் கண்குளிரக் கண்டு களிக்கும் வண்ணம் போந்து நெடும்போழ்து காத்தனர்.

இஃதிவ்வாறாக, மன்னவன் வருகையை அறிவித்தற் பொருட்டு ஒலிக்கப்பட்ட தோற்கருவி, தொளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி ஆகிய வாச்-சிய வொலிகள் மலையினின்று எதிரொலியாக மீண்டன.

அவ் வோசையைக் கேட்டலும், அக் கூட்டத்துள் ஒல்லொலி யெழுந்து, துண்ணென வமர்ந்து, எங்கணும் நிச்சத்தமே நிலைகொண்டது. அது, சற்றும் அசைவற்ற நீரோட்டத்தில் விரைந்து செல்லும் புதுவெள்ளம் பழைய வெள்ளத்தைச் சிறிதும் விடாது கொண்டு செல்லும் தன்மை போலவும், ஒளிவிளக்கு நெய்யற்ற காலத்தே சுடர் விட்டோங்கி யவிவது போலவும் இருந்தது.

பின்னர், செஞ்சியர் செம்மல், திருவமிருந்த சிங்காதனத்தின்கண் சிறக்க வமர்ந்தனன். இருபுடையும் சாமரம் இரட்டினர். பரந்து விளங்கிய அச் சபா மண்டபத்தின்கண், அந்தணர் முதலிய பெரியோரும், சேனைக் காவலில் சிறந்து விளங்கும் சேனாபதியும், மதி நுட்ப மமைந்த அமைச்சனும், அரசனது பீடுகளைப் பாடிப் புகழும் ஸம்ஸ்தான வித்துவானும், நாடோறும் கொற்றவனது வெற்றிகளை விளங்கச் சொல்லும் கணித சாத்திரியும், தொன்மையவாய சுவர்களைச் சித்திரித்து விளங்கச் செய்யும் ஓவியனும், மற்றும் எண்ணிறந்த ஏவலரும் ஒன்று திரண்டு, அரசனை வணங்கித் தத்தமக்குற்ற இருக்கையில் இனிதமர்ந்திருந்தனர்.

அக்காலத்து, வாய்மையுள்ள வாயிற்காவலன் அரசன் அவைக்களத்தை யடைந்து, கட்டியகையும் பொத்தியவாயுமுடையவனாய் நின்று கூறுவான் —]



## முதற் களம்

**இடம் :** அரசன் அவைக் களம்.
**காலம் :** முற் பகல்.
**பாத்திரங்கள் :** தேசிங்குமன்னன், மந்திரி, தூதுவன் காவலன் முதலாயினோர்.

**காவலன்** — (மன்னன் சமுகத்தை வணங்கி)

**வஞ்சி விருத்தம்**

மன்னு செஞ்சி மாநகர்
இன்னல் தீர்ந்தெ ழில்பெற
நன்ன யஞ்செய் நாதநின்
பொன்ன டிக்குப் போற்றியே.

**அமைச்சன்** — காவல ! என்ன விசேஷம் ?

**காவலன்** — (அமைச்சனை வணங்கி)

**அகவல்**

ஐயகேள் நந்தம் அரண்மனை வாயிலில்
வெய்யவன் நபாபு விடுத்தவோர் தூதன்
செய்ய தோற்றத்தன் திவ்விய சமுகம்
ஒய்யெனக் காணவந் துற்றன னின்றே.

**அமைச்சன்** — (அரசனை வணங்கி)

**விருத்தம்**

ஏந்தலே ஒருவன் நந்தம் எழில்மணி மாடவாயில்
போந்தனன்வடபானின்று பொலிவுறுந் தோற்றமுள்ளான்
ஏந்துநம் அரசு நீர்மை எடுத்திவண் உற்றான் போலும்
காந்தநம் சமுக நாடிக் கண்டிட விழைகின் றானும்.

**அரசன்** — மந்திரீ ! அவரை ஈண்டு அழைத்து, உற்ற விஷயங்கள் என்ன வென்று விசாரியும்.

**அமைச்சன்** — காவல! அவரைச் சமுகத்திற்கு வரவிடு.

(வெளியே போகிறான்.)

**தூதன்** — (மன்னன் சமுகத்தை யடைந்து தாழ்ந்து நின்று)

**அகவல்**

செல்வஞ் செழிக்குமித் தேயம் புரந்தருள்
மல்லலந் திண்டோள் மன்னவ போற்றி.

**அமைச்சன்** — ஐய! நீர் யார்? என்ன விஷயமாய் இங்கு வந்தீர்?

**தூதன்** — ஐய!

ஆறுகா டென்னும் அரியநன் னகரில்
வீறு நபாபெனும் வேந்தர் பெருமான்
ஏவலன் எனையவர் ஏக விடுத்தனர்
மேவிய திறையை விரைந்துகொள் ளெனவே
ஐயாண் டிற்கும் ஆயவக் கடமையைப்
பெய்யா விட்டால் பிறர்க்கிவ் வரசை
ஆக்குவ தாக அறையச் சொல்லினர்
தேக்கிய புகழ்சால் தேசிங்கு மன்னே.

**மன்னன்** — (தூதனைச் சினந்து நோக்கி) நல்லது, பகுதியா வேண்டும்! ஐந்து வருடத்திய பகுதியும் உடனே அளிக்காவிட்டால், இந்த நாட்டை வேறோர் அரசனுக்குக் கொடுத்து விடுவதாகவா சொல்லினர்! ஆஹா! என்ன அதிகாரம்!

**கலி விருத்தம்**

இவ்வு றுத்த லெமையசைக் காதுநீர்
தெவ்வு றுத்துஞ் செருக்களந் தன்னில் நம்
கவ்வை தீர்திறங் காணுவ மென்னவே
செவ்வி தேசென்று செப்புநும் வேந்தற்கே.

(தூதன் வணங்கிச் செல்கின்றான்.)

[இன்னணம் சொல்லிக் கொண்டே அரையன், தன் அரியணையை யகன்று, அரண்மனையின் அந்தப்புரத்தை யடைந்தனன். செஞ்சி என்னும் சீரிய மலைக்கோட்டைக்-கண்ணே தம் செம்மலைக் காணவந்த குடிகள் முதலாயினோர், ஆறு காட்டினின்று ஆண்டுப்போந்த தூதவன் தம் சிந்-தையிற் பெருகிய களிப்பைச் சிதைத்த காலத்து, பரந்த நீர் நிலையின் நடுவண் கல்லொன்று விழுந்த காலத்து, அமைந்த நீர் குழிந்தெழுந்து அலைந்து செல்வது போல-வும், தேன் செறிந்த அடையின் கண்ணே வன்கணாள னொருவனது கைப்படுதலும், கணக்கற்று நிறைந்த அவ்-வரிவண்டுகள் பகைவனை யஞ்சி, ஆர்வத்தோடும் அமைத்-திருந்த சேம நிதியைவிட்டு முணுமுணுத்துச் செல்வது-போலவும், அவையை யகன்று நாடிப் பலதிசைகளிலும் சிதைந்து சென்றனர்.

பின்னர் நாள் பல செல்ல, ஒரு நாள் வாயிற் காவலன் அரசனை யண்மிக் கூறுவான் —]

**காவலன்** — (விரைந்து வந்து வேந்தனை வணங்கி)

**விருத்தம்**

செம்மலே ஆரணு யென்றுந் திகழுறு நதியி னப்பால்
விம்மிய சேனை யோடு விளங்காறு காட்டு மன்னன்
நம்மிய லறியா தின்று நண்ணினன் படைகள் சூழச்
செம்மனத் தோடும் வல்லே தெவ்வினைப் பொருகவின்னே.

[என்று கூறிய அம் மாலைக் காலத்தே, போர்த்-தொழில் வல்ல அந்தப் புரவலன் தன் சேனாபதியாகும் **மகம்மதுகான்** என்பவனுக்கு, "நாட்டுக் காவலைக் கருதி விரைந்து வருக" என வரைந்தனுப்பினன். காவலன் விட்ட கடிதங்கண்ட மாவலனாகிய மகம்மதுகான் தனக்கு அன்று கடிமண நாளென்பதனைச் சிறிதுஞ் சிந்தியாது,]

**மகம்மதுகான்** — (காவலன் கொணர்ந்த கடிதங்கண்டு)

"இது கடிமண நாளன்று; கடி, மணநாளே"

**வஞ்சி விருத்தம்**

நாட்டுக் காவலை நாடினேன்
வீட்டுக் காவலை மேவிடேன்
வேட்டுக் காவலன் வேண்டினான்
ஏட்டுக் காவலன் தேடினான்.

[எனக்கூறி, தன் மனத்திற் கினிய பரிமாவின்மேல் பரிந்தேறி விரைந்து உகைத்து, விடியுமுன் தன் அரசன் ஆணையேபோல் செஞ்சியை யடைந்து, வேந்தன் முன் நின்றான். விடிந்த அந்நாள் விடியற்காலத்தே அரசன் துயிலுணர்ந்து, அமளி யகன்று, காலைக்கடன் முடித்து, கோயிலைக் குறுகி, தம் வழிபடு கடவுளை வணங்கி, அமர்க்-களத்தில் தமக்குத் தோன்றாத் துணையாக விருந்து அருள் புரியுமாறு தொழுதனன். பின்னர், தான் செருக்களம் செல்லு முன், சேடியர் பல்லோர் சூழ, வளர்பிறைச் சந்தி-ரனே போல் நாடோறும் வளரும் வனப்பினைக் கொண்ட மடந்தைப் பருவமுற்ற தன் மனைவியைக் காணும் விருப்-பங் கொண்டு, விரைந்து அந்தப்புரத்தை யடைந்தனன். ஆண்டுச் செம்பட்டுத் திரை யொன்றினை யிடையிலிட்டு இருவரும் சந்தித்தனர். அடர்ந்ததோர் வேலியின் அப்புறத்தே வளர்ந்தோங்கிய செடியிற் கிளைத்து மலர்ந்-துள்ள செவ்விய ரோஜாமலரின் நறுமணத்தால் கவரப்-பட்டு மனமுடைய ஒருவன், அவ் வலரைக் கிளையோடும் மெல்லிதிற் றுங்கப் பரிந்து, உடல் வளைந்தாங்கே, செஞ்-சியர் பெருமான், தன் இல்லக் கிழத்தி, பொற் றொடி யணிந்த கரத்தைத் திரைவழியே நீட்டுதலும், அதனைத் தன்கையி லேற்று, முத்தமிடும் ஆர்வமுடையனாய்த் தலை தாழ்த்து, சற்று உற்று நோக்கிக் கூறுவான் —]

## இரண்டாங் களம்

**இடம் :** அந்தப்புரம்.
**காலம் :** பிற் பகல்.
**பாத்திரங்கள் :** தேசிங்கு மன்னன், அரசி.

**மன்னன்** — (தன் மனைவியை நோக்கி)

காதலி நந்தம் கடிமணம் நிகழ்ந்த
போதுநீ பக்கலில் பொருந்த வமர்ந்தும்
எண்ணரு வனப்பின் இக்கரந் தன்னையென்
கண்களாற் கண்டு களித்தும் அறியேன்
வன்மன முள்ளோர் மரபின் வழக்கால்
உன்னியே விட்ட உயர்திரை நின்னைக்
காண வொட்டாது கரந்துவைத் ததுவே
மாணமர் கமல மலரென விளங்கும்
இக்கரங் காண்டலும் எழிலெலாந் திரண்டுன்
மைக்கண் முகத்தில் வயங்கு மென்னும்
பண்பினை யென்மனம் பரிந்து நினைத்திடும்
பெண்ணருங் கலமே பேசுவேன் கேளாய்
மாற்றலன் நபாபு வந்துநிற் கின்றான்
தோற்றிலன் அவற்குத் தோகாய் அஞ்சேல்
செருக்களம் புகுந்து தெவ்வினை வாட்டித்
தருக்குடன் வெற்றித் தாரினைப் புனைந்து
சோதிடம் வல்ல தூய்மை யாளர்
ஓதிய நன்னாள் உற்றஇன் றிரவில்
இன்புற நின்னோ டிவ்விடம் வருவேன்
துன்புற லொழிவை சொல்லெழிற் கிளியே
வந்தபின் நின்றன் மதிநிகர் முகத்தே

அந்தமில் லாத ஆதியங் கடவுள்
அந்தமாய்ப் படைத்த அழகினைக் கண்டு
நந்தலில் லாத நயப்பினை யடைவேன்.

### கலித்துறை

அடைவேயப் போரில் மலிபடை
மாள அடர்த்துதிரம்
கடைபோகக் காட்டுமென் ணுண்மையை
யுன்மலர்க் கைப்பிடித்துத்
தடையேது மின்றி யுவப்புடன்
கூறுவென் தட்சணமே
விடைகூறி யென்றனை யின்னே
செலவிடு மெல்லியலே.

அரசி — (மன்னவனை நோக்கி)

### கலி வெண்பா

என்னு ருயிரே இறைவனே செஞ்சியர்தம்
மன்னுஎன் கண்ணின் மணியன்னுய் — பன்னக்கேள்
எந்தைக் கொருபுதல்வி யானுனேன் அன்னுன்றன்
சிந்தலிலா வீரச் செழுங்கையாம் — அந்தமிகு
கட்டிலின் கண்ணே கருதி வளர்க்கவளர்ந்
திட்டமுடன் அன்னுன் இகல்மார்பில் — ஒட்டித்
தலைவைத்துக் கண்வளருங் காலத்தென் தாயார்
சிலைவைத்த தோளின்பால் சேர்ந்து — நிலைவைத்த
நம்மரபின் நங்கையர்தம் நாயகரோ டுஞ்சென்று
வெம்மை யுறப்புரிந்த வெற்றிகளைச் — செம்மையுறப்
பாடிப் பலநாளும் பன்முறையுந் தாலாட்ட
நாடி யறிந்துள்ளேன் நான்.

### கலி விருத்தம்

இன்ன வாறு வளர்ந்த இவ் வேந்திழை
மன்ன னேயிந்த மாற்றலர்க் கஞ்சிடாள்
இன்ன நாளிற் செருக்களத் தேகிடத்
துன்னு கின்ற துயர்க்குறி முன்பரோ.

[அப்பெண்மணி இவ்வாறு கூறக்கேட்டு, மன்னனது கண்களினின்றும் நீர்வார, முத்துப்போன்ற ஒரு துளி அவளது அங்கையிற் பட்டது. அவள் அதனை யுணர்ந்து, தன் கரத்தை விரைந்து இழுத்துக் கொண்டு தன் கணவற்கு உறுதி கூறுவாள் —]

### வண்ண விருத்தம்

அரசி —

[தந்ததன தான தந்ததன தான - தனதான]

முந்துபகை யாளர் வந்துபொரு போது - முரணோடே
உந்தியிக லாது நொந்துவிழி நீர - துகலாமோ
சிந்தையிகல் கூர வெந்திறலி னோடு - செருநாடி
வந்தபடை நூறி வென்றிமலர் சூடி - வருவாயே.

### சந்த விருத்தம்

எமரென்று பாவ லவர்நின்று பாடும்
இசைகொண்ட வென்ற னிறையே
அமர்வென்று வாகை யொடுவந்து காணில்
அகமொன்று வாழ்வு பெறுவேன்
சமரஞ்சி மேவின் முகமுந்து காணல்
தரியேனி தன்றி யிகலாய்
நமர்துஞ்ச நீயு முடிவொன்றில் யானும்
நலமொன்ற வீழ்வெ னழலே.

**பின்முடுகு வெண்பா**

அஞ்சேல் துரையே அரங்க னருள்புரிவான்
விஞ்சுமமர் செய்யநீ மேவுமுன் — கஞ்சவிழி
அத்திபெற்ற முத்தையொத்த அப்பையுற்ற
சித்தமொத்து முத்தமிட்டு செல். [விக்கரத்தை

[இன்னவாறு சொல்லிக் கொண்டு, தன் கரத்தை மற்றுமொருமுறை திரைவழியே நீட்டினள். நீட்டலும் அரசன் அதைத் தன் இருகரங்களிலும் அன்புடன் ஏற்று, பணிவொடும் முத்தமிட்டனன். பின்பு, அவ் வேந்தன், 'வருவது வெற்றியே யாக தோல்வியே யாக' எனத் துணிந்து, படையுடன் விரைந்து புறப்பட்டான். புறப்பட்டு, செருக்களம் புக்கு, மாற்றலரோடு வலிய போர் புரிந்து, முடிவில் மன்னன் முடிவடைந்தான். அது கண்ட போர்வீரர் ஆறுத்துயரமுற்று மாண்ட மன்னனைத் தாங்கி அரண்மனையை அடைந்தனர்.]



## மூன்றுங் களம்

**இடம்:** அந்தப்புரம்.
**காலம்:** முன் மாலே.
**பாத்திரங்கள:** போர்வீரர், அரசி, தோழியர், நகர்மாந்தர் முதலாயினோர்.

போர்வீரர் — (அரசியை நோக்கி)

**அகவல்**

திருவளர் செஞ்சித் தேசிங்கு மன்னன்
உருவளர் தேவீ ஓதுவோங் கேளாய்
செருக்களஞ் சென்று திறல்மிகு வேந்தன்
தருக்குடன் புரிந்த சமரின் தன்மையை
உரைக்கவும் போமோ உத்தம மணியே
திரையெனத் திரண்ட தீயவன் படையில்
மகம்மது கானும் வல்லமர் புரிந்தும்
இகலில் லாமல் இறந்து பட்டனன்
அதன்பின்,
இடர்பல வற்றினும் ஏந்தலேத் தாங்கிய
திடமுறும் பரியைத் தீயவன் கரவால்
கொன்றபின் மன்னன் கொடுஞ்சினங் கொண்டு
முன்னிய வாட்போர் மொய்ம்புடன் புரிந்தும்
மாற்றலன் படைகள் வலிவுறல் கண்டு
தோற்றிவர் கையில் துயருறு முன்னம்
ஆருயிர் விட்டே அடைவன் புகழென
சீரிய வாளேச் சேரவான் வீசி
வலிவொடும் பரந்த மார்பினில் ஏற்று
மலிபெரும் புகழொடு மாண்டனன் மாண்டனன்
உடலினைத் தாங்கி உற்றனம் ஈண்டே
கடவுளின் செலோ கற்பருங் கலமே.

[எனக்கூறி, பெறலருஞ் சிறப்பினையுடைய தம் மன்னன் யாக்கையை மங்கலமிழந்த மங்கை முன் கிடத்தினர். அது கண்ட அக் கற்பரசி, சிறிதும் மனக்கலக்கமுறாது, தன் பாங்கியரை நோக்கி, இந்தன மடுக்கி யீமத்தீ வளர்க்கக் கட்டளையிட்ட பின்னர், ஆண்டுச் சூழ நின்றாரை நோக்கிக் கூறுவாள் :—]

அரசி — (தன்னைச் சூழ நின்றாரை நோக்கி)

**கொச்சகக் கலிப்பா**

ஒன்ன லர்க்கிளை யாம லமரிடை
உயிர்கொ டுத்தநல் உத்தம வீரரே
இந்த கரினு ரியநன் மாந்தரே
இயம்ப ருங்கற் பெழினுறு மாதரே
என்ன ருங்கண வற்குமிப் பாவிக்கும்
ஈச னிட்டவாழ் வில்வள வானதால்
முன்னு தீயிலென் மன்னவ னோடின்று
மூழ்கி நற்கதி சார்ந்தின்பு றுவெனே.

**அகவல்**

இவ்விதி யாங்கள் எய்திடச் செய்த
அவ்விய முற்ற அம்மகம் மதியன்
இக்கே டதனினும் இன்னலுற் றொழிவான்
மிக்கசீர் மேவும் மேற்புல வேந்தர்
அக்கணம் போந்தே அன்புட னுளரும்
தக்கதோர் நல்லற சாட்சியு ளாகி
நீவிர் நுங் கால்வழி நேருமக் களுடன்
பூவிலின் புற்றுப் பொற்புற வாழ்வீர்
வான்மகள் மண்மகள் மதியொடு கதிரும்
பான்மையி னறியப் பகர்ந்தனென் வருந்தலீர்.

அரசி — (தீயிற் பாயுங் காலத்தே ஆகாயத்தை நோக்கி)

**விருத்தம்**

எல்லா முணர்ந்த இறையோனே
யாண்டும் நிறைந்த வொளியானே
அல்லார் மனத்திங் கொருபேதை
அடியா ளுன்ற னடைக்கலமே.

(பூமியிற் கிடக்கும் தன் கணவனுகத்தை நோக்கி)

மல்லார் பகைஞர் போரேறே
வளஞ்சால் செஞ்சிக் கிறையேநின்
இல்லாள் தனித்திங் கில்லாதே
இணைந் துன்னோடு வருவேனே.

[பின்பு, ஒரு மணமகள், ஆடையணிகளால் தன்னைப் புனைந்துகொண்டு, தான் விரும்பிய மணாளனைத் தழுவுமாறு சயனக் கிருகத்தை மனமகிழ்ச்சியோடும் நாடிச் செல்வதே போல், அச் சுந்தர வனிதையும் சிதைக்கண் இவர்ந்து, தன் அரிய கணவனது ஆகத்தை இறுகத் தழுவி, பக்கலில் படுத்தனள். படுத்தலும், ஏவலாளர் கொள்ளி வைத்துக் குமைத்து மூடினர். இறந்துபட்ட காதலனும், இருந்து வாழ்ந்த காதலியும் இமைப்போதில் சாம்பராயினர்.

முடிவில் மகம்மதிய மன்னன் ஆண்டுப் போந்து, அம் மங்கையர்க்கரசி தீக்கண் பாய்ந்து இறந்துபட்ட நிலையைக் கண்டு, ஆராயாமற் புரிந்த தன் செய்கையை யுன்னி யுன்னிப் பெரிதும் மனமுளைந்தான்.

கணவன் மரணமடைந்த பின்னர் உயிர் வாழ்தல் கற்புடைய மங்கையர்க்குப் பெரும்பாவ மாகுமென் றுன்னித் தன்னுயிரைக் கணப்போதில் பறி கொடுத்த கற்பர-

சியின் பெயர் இந் நிலவுலகின்கண் எக்காலும் நிலவும் வண்ணம் இராணிப்பேட்டை என்னும் சிறந்த நகரமொன்றனை அம் மன்னன் நிருமித்தனன் என்று கூறுப.]

## வாழ்த்து

### கலி விருத்தம்

வாழி செஞ்சி வளநகர் மன்னவன்
வாழி யன்னவன் மாண்புறு காதலி
வாழி யந்நகர் வாழ்தரு மாந்தரும்
வாழி யங்கில மன்னரும் வாழியே.



# CONTENTS



# உள்ளுறை

உபாத்தியாயர்கட்கான

## குறிப்புக்கள்

இந் நாடகமஞ்சரியில் பத்துச் சிறு நாடகங்களுண்டு. இவை பெரும்பாலும் பாடசாலை மாணுக்கர்களுக்கே உபயோகமானவை. 1907ஹு கனந்தங்கிய சென்னைக் கவர்னர் அவர்கள் எமது பாடசாலைக்கு விஜயஞ் செய்தபோது, பிள்ளைகள் அவர்முன் நடிப்பதற்கென 'தேசிங்கு மன்னன்' என்னும் நாடகத்தைச் செய்தனென். அது இந்திய கதையாகவும், அங்கில மொழி-யில் இயன்றிருப்பதாகவும் இருத்தல்வேண்டுமெனக் கருதி ஆராய்வுழி, ஸ்ரீமாந் தோட்டக்காடு இராமகிரு-ஷ்ண பிள்ளையவர்கள் இயற்றிய 'இந்திய கதைகள்' என்னும் அங்கிலப் புத்தகம் ஒன்று கிடைத்தது. அதனில் கண்ட அங்கிலக் கவியின் மொழிபெயர்ப்பே யான் தமிழிற் செய்தது. பின்னர் 1909ஹு அம் மகிபர் இரண்டாமுறை வந்தகாலத்து, அங்கிலத்தில் பழமையாக வழங்கும் ஒரு கதையினையே ஏற்றவாறு மாற்றித் தமிழ் நாடகமாக்கினேன். பிரிடிஷ் ராஜ்யம் என்பதும் அக்காலத்து எழுதியதே. அது விஷய உணர்ச்சியின் பொருட்டு வினுவிடையாக இயன்றுள்-ளது. நாடகம் பாலர்முதல் விருத்தர் ஈறுக உள்ள அனைவர்க்கும் இன்பமூட்டி, நல்லறிவுச் சுடர்கொளுத் துவதாகும். அது நமது நாட்டில் தலைதடுமாறிக் கிடக்கின்றது. சில வருடங்களாக அதுவும் சிற்சில அறிஞர்களால் திருத்தமடைந்து வருகின்றது.

இது நிற்க, இங்லந்து முதலிய மேல்நாடுகளில் சிறு நாடகங்களைப் பாடசாலைச் சிறுவர்க்குப் பயிற்றி, இன்பமூட்டி, நல்லறிவை வளர்த்து வருகின்றனர். அத்தகைய முறையினை நம்து நாட்டிலும் கையாட வேண்டும் என்னும் கருத்துடையராய், நமது துரைத்தனத்தார் தொடர்முறைப் போதனையில் இதனைக் கொள்ளுமாறு ஊக்கி வருகின்றனர். ஸ்ரீமாந் A. C. பிரணதார்த்திஹர ஐயர், B. A., அவர்கள் பரீக்ஷா காலங்களில் பாடபுத்தகத்தில் வரும் கதைகளைப் பிள்ளைகளைக்கொண்டு நாடகமாக நடித்துக் காட்டுமாறு வற்புறுத்துகின்றனர். இந்தக் காரணங்களால் இத்தகைய சிறு நாடகங்கள் இக்காலத்தே மிக இன்றியமையாதவை என்பது தெளிவாம்.

இனி, இப்புத்தகத்துள் இயன்றுள்ள சிறு நாடகங்கள் அளவிலும் பாஷைநடையிலும் படிப்படியாய் உயர்ந்து நிற்பது உய்த்துணர்வார்க்கு நன்கு விளங்கும். அவை பெரும்பாலும் மாணாக்கர்க்கு உபயோகமாதலேயன்றி, சிறுபான்மை உபாத்தியாயர்களுக்கும் மாதிரியாக சில விஷயங்களை யுணர்த்துமென்று நம்புகின்றேன்.

நாடகங்கள் உரைநடையான சம்பாஷணைக் கிரமத்தில் இயல்வது நலம். இடையிடையே எளிய நடை வாய்ந்த விருத்தம் அகவல் முதலிய செய்யுள்களும், ஏற்றவிடத்து இசைப்பாட்டுகளும் விரவிவரத் தொடுப்பது சாலச் சிறப்பாகும். முற்றும் பாட்டுக்களாக அமைப்பதும், முற்றும் வசனமாக அமைப்பதும் அத்துணைச் சிறப்பன்று. பாத்திரங்களின் இயல்பிற்குத் தக பாஷைநடையை யமைப்பதில் ஊக்கங் கொள்ள

வேண்டும். இதனைப் 'பே-பே' 'தமிழ் மொழி' என்னும் பாடங்களில் ஒப்பிட்டு உய்த்துணர்க.

பழமையான கதைகளைப் படிப்பதிலும் கேட்பதிலும் நம்மவர்க்கு விருப்பம் மிகுதியாதலின், இதனில், பெரும்பாலும் பழைய கதைகளே ஏற்றவாறு நாடகமாக யாத்துள்ளேன். தமிழ்ப்பாஷை வடமொழியினின்றும் வந்ததென்பது பலர் கொள்கை. அது அவ்வாறு அன்றென்பதையும், அது தனிமொழியே யென்பதையும் 'தமிழ்மொழி' என்னும் பாடம் நன்கு விளக்கும்.

ராவ் பஹதூர் எல்.ஸி.வில்லியம்ஸ் பிள்ளை யவர்கள் இப்புத்தகத்தின் முகவுரையிற் கூறியபடி, இதனை மேல்வகுப்பு மாணாக்கர்களுக்குத் தனிப் பாடமாக (Extra Reading) அமைத்தால், வியாசம் எழுதும் திறமை விருத்தியாகு மென்றும் நம்புகின்றேன். சில சமயங்களில் இதினின்றும் வியாசமெழுதல் என்னும் பாடத்தை நடத்தலுமாகும்.

இது, யான் கருதியவாறே நாட்டிற்கு நலம் பயப்பதாயின், இதனைப்போல் இரண்டாம் புத்தகமும் வெளியிடும் துணிவுடையேன். அதன் விவரத்தைப் பின்பக்கத்திற் காண்க.

கா. நமச்சிவாயன்.

# நாடக மஞ்சரி

## இரண்டாம் புத்தகம்



இதனில் —

(1) ஓடிப்போன ஒட்டகம்
(2) ஹென்றி மன்னன்
(3) குமணன் கொடை
(4) தசரதன் சாபம்
(5) ஸம்யுக்தா ராணி
(6) பொய்கையார்
(7) வெனிஸ் வர்த்தகன் (தீர்ப்பு)
(8) மன்னனும், மைந்தனும்
(9) உத்தியும், புத்தியும்
(10) பேராசைப் பேயன்

ஆகிய பத்து நாடகங்கள் சேரும்; விரைவில் வெளி-வரும். விலை அணா 12.

சென்னை :

வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

வெளியிடுவோர்.